# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...



ALKI ● 07.02.2010 ● ரூ.10.00 ● 96 பக்கங்கள்

கடம்பா... காப்பாத்து!

பூட்டுக்குப் போட்ட பூட்டு!

கடவுளின் கெஸ்ட் ஹவுஸ்!

வெல்கம் டு பிரியாணி ஸிட்டி!

திண்டுக்கல் மாவட்ட ஸ்பெஷல் – I

# கல்கி

அடுத்த இதழ்...

## திண்டுக்கல்! மாவட்ட ஸ்பெஷல்-1

பரவச பழநி!

ஏழாவது படைவீடு!

பாலபாரதி நேர்காணல்!

வத்தலக்குண்டு ரைட்டர்ஸ்!

ஹைடெக் பஞ்சாமிர்தம்!

புடைவை கிராமம்!

பக்கத்துக்குப் பக்கம் சுவாரஸ்யம்...
அட்டை டு அட்டை அற்புதம்...

திண்டுக்கல் மாவட்டச் செய்திகள் : கதிர்பாரதி. ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு



நியூஸ் ஏந்தி பவன்

## பலே சிற்பி!

பழனியை அடுத்துள்ள பெரிய ஆவுடையார் கோயிலில் அமைந்துள்ள தட்சிணாமூர்த்தி சிலை பழம்பெருமைவாய்ந்தது மட்டுமின்றி சிற்பக் கலை நுணுக்கத்துக்கு நல்லதொரு எடுத்துக்காட்டு. தட்சிணாமூர்த்தி அமர்ந்துள்ள கல்லால மரம் இலைகளின் நரம்புகள் தெரியும் வகையில் துல்லியமாக வடிக்கப்பட்டுள்ளது. மேலும், அபிஷேகம் செய்யும் போது, இம்மரத்தின் உச்சியில் வார்த்தால் நேரடியாகச் சுவாமி மீது விழும் அமைப்பு கொண்டது. மரத்தில் ஆங்காங்கு சிறு சிறு துளைகள் அமைக்கப்பட்டு அதன் மூலம் அபிஷேகப் பொருட்கள் விழுகின்ற வகையில் உருவாக்கப்பட்டுள்ள இச்சிலை மிக வித்தியாசமானது.



## காந்தியடிகள் வருகை

பழனிக்கு காந்தியடிகள் 1934, 1946 ஆகிய ஆண்டுகளில் வந்துள்ளார். 1934-ல் வந்தவர், பொதுக் கூட்டம் முடிந்தவுடன் ஆலயத்துக்கு அழைத்தபோது வர மறுத்து 'பிரசாதம்' மட்டும் பெற்றுக் கொண்டார். காரணம், அன்றைய நாளில் ஆலயத்தில் அனைவரையும் அனுமதிக்கும் வழக்கம் இல்லை. பின்னர் 1946-ல் இராஜாஜியுடன் வந்து தரிசனம் செய்தார். அப்போது எந்த வேறுபாடுமின்றி அனைவரும் ஆலயத்துக்குள் அனுமதிக்க ஆரம்பித்திருந்தனர். 1946ல் மகாத்மா காந்தி பழனி வந்ததன் நினைவாக வ.உ.சி. பேருந்து நிலைய வாயிலில் நினைவுச் சின்னம் 1985ல் அமைக்கப்பட்டது.




பழனிக்கு ரயில் வேண்டும் என்ற கோரிக்கை கிடப்பில் கிடந்தாலும் உள்ளூரில் தண்டாயுதபாணி எக்ஸ்பிரஸ்களாக ஜல்ஜல் நடையாடுகின்றன குதிரை பூட்டிய ஜட்காக்கள்! கிட்டத்தட்ட அழிந்து கொண்டிருக்கும் தொழில்களில் குதிரை வண்டி தொழிலும் ஒன்றாகிவிட்ட நேரத்தில் பழனியில் மட்டும் பரம்பரையாக இத்தொழில் செய்பவர்கள் உண்டு. ஹைஹ... ஹைஹ... ஜல்... ஜல்... சப்தத்துடன் குதிரை வண்டி சவாரி சுகமானது மட்டுமில்லை... சுற்றுப்புறத்தைப் பாதிக்காத ஆரோக்கிய பயணமும்கூட.

# தண்டாயுதபாணி எக்ஸ்பிரஸ்



மின் இழுவை இரயில் (வின்ச்)

697 படிகள் கொண்ட பழனி மலை மீது ஏறிச் செல்ல இயலாதவர்களுக்கென 1966-ஆம் ஆண்டு முதல் மின் இழுவை இரயில் இயக்கப் படுகிறது. எஃகு கம்பி வடத்தில் மின்சார உதவியுடன் இயங்கும் இந்த இரயில் 8 நிமிடங்களில் மலை உச்சியை அடைகிறது. இதுபோல இந்தியாவில் வேறு எங்கும் இருப்பதாகத் தெரியவில்லை. முதல் மின் இழுவை இரயிலுக்கான இயந்திர சாதனங்கள் 'ஜப்பான்- ஹிட்டாச்சி' நிறுவனத்தால் உருவாக்கப்பட்டவை.

தகவல்கள், படம்: என்.ஏ.லதா







# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்:
லக்ஷ்மி நடராஜன்

ஆசிரியர் : சீதா ரவி

உதவி ஆசிரியர்கள் :
கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா

வடிவமைப்பு :
எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், பா.கோபால்

தொலைபேசி : 044 - 4343 8888
தொலைநகல் : 044 - 4343 8899

ஆசிரியர் குழு :
044 - 4343 8822
kalki@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு :
044 - 4343 8811
marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு :
044 - 4343 8833
subscription@kalkiweekly.com

விற்பனை பிரிவு :
044 - 4343 8844
sales@kalkiweekly.com

இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

இணையதளத்தில்...
வாங்கி, வாசித்து, மகிழ...
www.sangapalagai.com

சந்தா விவரம் (ஒரு வருடம்) :
உள்நாடு : ரூ.500/-
வெளிநாடு : ரூ.3,800/-

கல்கி பில்டிங்க்ஸ்,
47-NP, ஜவஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

இதழில் வெளியாகும் விளம்பரங்களின் உண்மைத் தன்மைக்கு கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.

படிப்பில் சிறந்து விளங்கும் மீனவ சமுதாயத்தைச் சேர்ந்த ஒருவனுக்கு (ஹீரோவுக்குத் தான்) காதல் வலை வீசுகின்றனர் இரண்டு பெண்கள். (ஆமாம் ஹீரோயின்ஸ்!) யார் வலையில் விழுந்தார் ஹீரோ என்பதுதான் கதையாம். ஒரு பெண்ணை ஏற்க, மறு பெண்ணை மறுக்க என்ன காரணம் என்பதுதான் க்ளைமாக்ஸாம்.

**(க்ளைமாக்ஸ் காட்சி கட்டாயம் கடல்லதான்னு சொல்லுங்க!)**



ஜெயம் ரவியும், தமன்னாவும் முட்டிக்கொள்ளும் 'தில்லாலங்கடி'யை இயக்குவது ஜெயம் ரவியின் அண்ணன் ராஜாதான். ''எதிரும் புதிருமான கேரக்டர்களிடம் ஒரு ஈர்ப்பை உண்டுபண்ணுவது மாதிரிதான், என் எல்லா கதையும் இருக்கும். அதுபோலத்தான் இதுவும்'' என்கிறார்.

**(ஜெயம் ரவியை விட்டுட்டு வேற யாருக்காவது படம் இயக்குங்க ஸார்!)**



''கோடம்பாக்கத்துல சமீபகாலமாக, போலீஸ் ட்ரெஸ் பொருந்திப் போவது சினேகாவுக்குத்தான். அப்படியே விஜயசாந்தி போல இருக்கிறார்; ஆக்ஷனிலும் கலக்குகிறார். நான்கூட போலீஸ் கேரக்டருக்கு அவர் பொருந்துவாரா என்று பயந்தேன். ஏனெனில் சினேகா மிகவும் மென்மையான பெண்'' என்கிறார் 'பவானி' ஐ.பி.எஸ். படத்தின் இயக்குநர் கிச்சா. இப்படம் வைஜெயந்தி ஐ.பி.எஸ்.ஸின் ரீமேக்!

*(அப்போ சினேகா ஐ.பி.எஸ்!)*




ஜீவாவும் வடிவேலுவும் இணைந்து காமெடி விருந்து படைக்க இருக்கும் படம்தான் 'கச்சேரி ஆரம்பம்' என்கிறது படத்தைத் தயாரிக்கும் சூப்பர் குட் ஃபிலிம்ஸ் தரப்பு. எதைக் கேட்டாலும் இல்லை என்று சொல்லாமல் தரும் ஹீரோவிடம், அவன் காதலியையே கேட்கிறான் ஒருவன். என்ன வாகும் கதை? அப்பதான் கதையில் கச்சேரியே ஆரம்பமாகிறது. ஏறக்குறைய இது யூத்துக்கான கச்சேரியாம் - இயக்குநர் திரைவாணன் ஸ்டேட்மெண்ட் இது!

*(யாராவது சீனியர் சிட்டிசன் கச்சேரி ஆரம்பிங்கப்பா)*

பயாஸ்கோப்

# இது யூத் கச்சேரி!

● வி.ஜி.சத்தியநாராயணன்,
சென்னை - 61

? இலங்கை அதிபர் தேர்தல் முடிவுகள் குறித்து...?

! ஃபொன்சேகாவுக்கு கடைசி நிமிஷத்தில் தடம் மாறி ஆதரவு அளித்த சந்திரிகாவின் சந்தர்ப்பவாதம், ராஜபட்சயவின் வாய்ப்பைக் குறைத்துவிடவில்லை! அதிகக் கவலை அளிப்பது, சிங்கள வாக்காளர்கள் உற்சாகமாக வாக்களிக்க, தமிழர்களின் வாக்கு சதவிகிதம் மிகக் குறைவாக இருந்ததுதான். இதனால் தமிழர் நலன் தொடர்ந்து புறக்கணிக்கப்பட வாய்ப்பு உண்டு; அதற்கு ஒரு போலி சமாதானமும் உண்டு.

● ஏ.எஸ்.யோகானந்தம்,
கலிங்கியம்

? ''சர்க்கரை விலை எப்போது குறையும் என்று கண்டுபிடிக்க நான் ஒன்றும் ஜோதிடர் அல்ல!'' என்று பவார் கோபப்பட்டிருப்பது எப்படி உள்ளது?

! சர்க்கரை விலை உயர்வைக் காட்டிலும் அதிகக் கசப்பாக உள்ளது.

● பி.தர்ஷினி, குடந்தை

? 2011 தேர்தலில் தி.மு.க. 200 இடங்களில் வெற்றி பெறும் என்று அழகிரி நம்பிக்கை தெரிவித்துள்ளாரே?

! குடியரசு தினத்தன்று, குடியரசுத் தலைவர் தொடங்கி சோனியா, கஷ்மா உள்பட எல்லோரும் தேர்தல்களில் இனி பண பலம், அடியாள் பலம், கிரிமினல்களின் பங்கேற்பு போன்றவை கூடாது; கூடவே கூடாது என்று பொன்மொழி உதிர்த்தார்கள் அல்லவா? அதெல்லாம் காற்றோடு போய்விடும்; செயலுருப் பெறாது என்ற நம்பிக்கையின் பேரில்தான்.

# காதலை ஊக்குவிக்கச் சொல்கிறாரே

● எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்

? காதலை ஊக்குவிப்பதன் மூலம் சாதிய வேறுபாடுகளைக் களைய முடியும் என்று கருணாநிதி கூறுகிறாரே?

! காதல், சாதி வேறுபாடுகளுக்கு அப்பாற்பட்டது என்பது உண்மையே. ஆனால், அது இயல்பாக உருவாக




* ராங் ரூட் அறிவுரை!

வேண்டும். அப்போதுதான் அதற்கு எதிர்ப்புகளை வெற்றி கொள்ளும் வலிமையும் இருக்கும். ஆனால், காதலை ஊக்குவிப்பது என்பது வேறு. அது ஒழுங்கீனத்தில்தான் கொண்டுவிடும்; சமுதாயம் சீர்கெடும்.

● பவானி கிருஷ்ணா, பெங்களூரு

***? ஒரு கத்திரிக்காய் விவகாரம், அமைச்சர்கள் ஜெயராம் ரமேஷ் - பவாரிடையே கருத்து மோதலை உருவாக்கியுள்ளதே?***

! அது ஏதோ சாதாரண கத்திரிக்காய் இல்லையே! தலைமுறைகளின் உயிரோடு விளையாடும் மரபணு மாற்றப்பட்ட கத்திரிக்காய் ஆச்சே! பவார் கருத்தை இவ்விஷயத்தில் ஜெயராம் ரமேஷ் நிராகரித்துப் பேசியது வரவேற்கத்தக்கது.

● ஜெயலட்சுமி சேஷாத்ரி, கும்பகோணம் ❒


* மனமுவந்த மேம்பாடு

முதல்வர்?


* அசாதாரண...


*... மோதல்!

***? டோனி தலைமையிலான கிரிக்கெட் அணி, முன்னாள் கேப்டன் கவாஸ்கர் யோசனையின் பேரில் நமது ஹாக்கி அணிக்கு ஒரு கோடி வழங்க நினைப்பது விளையாட்டுத் துறையின் மேம்பாட்டினைக் காட்டுகிறதா?***

! கலைகளின் வளர்ச்சிக்கு இன்று ஸ்பான்ஸர்களை ஏற்பது சகஜமாகி விட்டது. வசதியற்றவர்களுக்கு வசதி படைத்தவர்கள் மனமுவந்து உதவுவது என்பதை வள்ளுவம் அங்கீகரிக்கிறது. ஆனால், இது பிச்சை போடுவது போன்ற உணர்வை ஏற்படுத்திவிடக்கூடாது. கர்வம் - தாழ்வு மனப்பான்மை உருவாக அனுமதிக்கக் கூடாது. ஹாக்கி வளர்ச்சிக்கு உதவுவதென்பது கலை வளர்ச்சிக்கு உதவுவதற்கு நிகரான ஒரு கௌரவம் பெற வேண்டும்.

● ஜி.கீர்த்தனா, நெய்வேலி

***? திகட்டத் திகட்ட, ஒரு புத்தகம் போடும் அளவுக்கு தொலைக்காட்சியில் பொங்கல் சிறப்பு நிகழ்ச்சிகளை இந்தத் தடவை வாரி வழங்கியிருக்கிறார்களே?***

! சர்க்கரைப் பொங்கலை அளவாகச் சுவைக்கலாம்; சாப்பாடாகவே சாப்பிட முடியுமா? போதாக்குறைக்கு வெல்லம் கூடுதலாகி விட்டால் சர்க்கரைப் பொங்கல்கூட கசந்து வழியும்.

● பா.சீனிவாசன்,
காகிதபுரம் ★

? பஸ் டிரைவர்கள் பணியின்போது செல்ஃபோன் ஓட்டக்கூடாது என்று தமிழக அரசு அறிவித்தது எப்படி உள்ளது?

! இப்படித்தான் ஓட்டுநர்களுக்கும் எதில் பேசுவது, எதை ஓட்டுவது என்று குழப்பம் ஏற்பட்டு விடக்கூடாது என்கிற முன்னெச்சரிக்கைதான் காரணம்!

● கே.வி.ராமன், சென்னை - 73

? 1997லிருந்து 2008 வரை 1,99,132 விவசாயிகளின் தற்கொலையாமே. விவசாயிகளின் பல கோடி ரூபாய் கடன்களை ரத்து செய்தது பயனைத் தந்ததாகத் தெரியவில்லையே?

! ஒட்டுமொத்தமாகக் கணக்கிடுவதைக் காட்டிலும், ஆண்டுதோறும் தற்கொலைகள் படிப்படியாகக் குறைகின்றனவா அல்லது அதிகரிக்கின்றனவா என்று பார்ப்பது அவசியம். எவ்வாறாயினும், அரசாங்கத்தின் பல்வேறு உதவிகள் விவசாயிகளுக்குப் போய்ச் சேரவில்லை; திட்டங்கள் பயன்தரவில்லை என்பது தெளிவு. வோட்டு அறுவடையை மட்டுமே மனத்தில் கொண்டு திட்டமிட்டால் விளைச்சலும் இப்படித்தான் இருக்கும்.



★ சந்தர்ப்பவாத ஆதரவு



★ 2011 நம்பிக்கை!



★ நியாயமற்ற கோரிக்கை!

● ஜி.இந்திரா, பெங்களூரு-17

? ராஜீவ் காந்தி கொலை வழக்கில் சம்பந்தப்பட்ட நளினி விடுதலையாக வேண்டும் என்ற கோரிக்கை நியாயமானதா?

! எவ்வகையிலும் நியாயமானதல்ல. இது விஷயத்தில் ராமதாஸ் போன்ற அரசியல்வாதிகள் காட்டும் அனுதாபம் கண்டிக்கத்தக்கது; சு.சுவாமி காட்டும் உறுதி வரவேற்கத்தக்கது.

● கே. முத்து லட்சுமி குமார்,
வி.கே.புரம் ★

? மின் வாரிய ஊழியர்களுக்கு 40 சதவிகித சம்பள உயர்வு கொடுத்த மின் வாரியம், இப்போது நஷ்டத்தில் உள்ளதாகக் காரணம் காட்டி, மின் கட்டணத்தை உயர்த்தப் போவதாகக் கூறுகிறதே - இது குறித்து தராசுவின் கருத்து என்ன?

! சம்பள உயர்வு; கூடவே கட்டண உயர்வு என்றால், அது robbing Peter to pay Paul என்றே கருதப்படும். மின் வாரியம் லாபகரமாக இயங்க, கட்டண உயர்வு மட்டுமே வழியல்ல. வேறு பல குறைபாடுகள் களையப்பட வேண்டும். அப்படிச் செய்து, லாபம் ஈட்டி, ஊதிய உயர்வு அளிப்பதே நியாயம்.

☐ ரூ.150/- பரிசு பெறுபவர் :

ஜெயலட்சுமி சேஷாத்ரி, கும்பகோணம்

★ ரூ.75/- பரிசு பெறுபவர்கள் :

கே. முத்துலட்சுமிகுமார், வி.கே.புரம்

பா. சீனிவாசன், காகிதபுரம்

● தேர்தல் கமிஷனின் வைரவிழா கொண்டாட்டங்களில் ஜெயலலிதா கலந்துகொள்ள தில்லி வந்தது அரசியல் வட்டாரங்களில் பலவித எதிர்பார்ப்புகளைக் கிளப்பிவிட்டாலும், இறுதியில் அந்த விஸிட் எந்த விதத் தொடர் நடவடிக்கையும் இல்லாத நிலையில் முடிந்துவிட்டது. சோனியா காந்தியை அவர் தனியாக பதினொரு வருடங்களுக்குப் பிறகு சந்திக்கக்கூடும் என்று சொல்லப்பட்டது.

தேர்தல் கமிஷன் நிகழ்ச்சியன்று, அந்த அரங்குக்கு காங்கிரஸ் மற்றும் எதிர்க்கட்சித் தலைவர்கள் வந்த போது அவர்களை வரவேற்ற தேர்தல் கமிஷனர்கள் அவர்களை முதலில் வி.ஐ.பி. ஹாலுக்கு அழைத்துச் சென்றார்கள். அங்கு சூடாகத் தேநீர் அருந்திக் கொண்டே வணக்கம் தெரிவித்துக்கொண்டார்கள் தலைவர்கள். அங்கேதான் ஜெ.வும் சோனியாவும் சந்தித்து வணக்கம் தெரிவித்துக் கொண்டார்கள். பின்னர் கண்காட்சியைப் பார்க்கும்போது அருகருகே இருந்தாலும் பேச முடியவில்லை. நிகழ்ச்சியின்போது ஜெயலலிதா முதல் வரிசையில் அமர்ந்திருக்க, மேடையில் இருந்தார் சோனியா. ஓரிரவு மட்டுமே தில்லியில் இருந்தார் ஜெ. சோனியாவுடன் தனிப்பட்ட சந்திப்புக்கு ஏற்பாடு செய்ய அவரது காங்கிரஸ் நண்பர்கள் முயற்சி செய்தும் முடியவில்லை. ''இது ஒரு துவக்கம்தான்'' என்று சொன்னார் ஒரு அ.தி.மு.க. பாராளுமன்ற உறுப்பினர். ''காலம் இன்னும் கனிந்து வரவில்லை. தி.மு.க. இப்போது தமிழ்நாட்டில் ராட்சதத் தனமாக இருந்தாலும் தி.மு.க எதிர்ப்பு என்பது சாம்பல் மூடிய நெருப்பாக இன்னமும் இருக்கிறது என்பதைத்தான் புலனாய்வு ஏஜென்ஸிகள் சொல்கின்றன. அ.தி.மு.க.வுக்கும் ஒன்பது பாராளுமன்ற உறுப்பினர்கள் இருக்கிறார்கள் என்பதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். பொதுவாக தி.மு.க அமைச்சர்களின் செயல்பாடுகளும் சரியில்லை. நல்லுறவுக்கான தொடர்புக்கும் தி.மு.க.வில் சரியான நபரில்லை. 2011ல் எது வேண்டுமானாலும் நடக்கலாம்'' என்கிறார் ஒரு தமிழ்நாட்டு காங்கிரஸ் பிரமுகர்.



# சும்மா போன அம்மா விஸிட்!

தலைநகர விருந்து

இதற்கிடையில் எந்த விதத் தேர்தலும் அடுத்த சில மாதங்களுக்கு இல்லாத நிலையில் தலைமை தேர்தல் கமிஷனர் நவீன் சாவ்லா மதர் தெரசாவைப் பற்றி புத்தகம் ஒன்றை எழுதி முடிக்கும் தருவாயில் இருக்கிறார். தேர்தல் கமிஷனரான குரேஷி இலக்கிய ஆர்வலர். உருது கவிதைகளை ஆங்கிலத்தில் மொழிபெயர்ப்பதில் பிஸியாகிவிட்டார் அவர்.



❋ கட்காரி

● விலைவாசிப் பிரச்னையை விசிறி மத்திய அரசுக்குச் சங்கடம் கொடுக்க பா.ஜ.க. தலைவர் கட்காரி போராட்டத் திட்டங்களை வகுத்து வரும் நிலையில், இதன் எதிரொலியாக, அமைச்சர் சரத் பவாருக்கும் பிரதமருக்கும் இடையில் கருத்து வேறுபாடு எழுந்திருக்கிறது. நுகர்வோர் நலனைப் பாதுகாக்கும் துறை பவாரிடம் தான் இருக்கிறது. ஆனால், கடந்த ஆறு மாத காலத்தில் சடசட என ஏறிவிட்ட விலைவாசியைக் கட்டுப்படுத்த அந்தத் துறை எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை. ''விலைவாசியைக் கட்டுப்படுத்துவது அமைச்சரவையின் கூட்டுப் பொறுப்பு'' என்று பவார் சொன்னது மேலும் கடுப்பைக் கிளப்பிவிட, நுகர்வோர் துறை இலாகாவை அவரிடமிருந்து பிடுங்கினால் என்ன என்ற எண்ணம் காங்கிரஸில் தோன்றிவிட்டது. ''சச்சின் பைலட், ஜோதிர் ஆதித்ய சிந்தியா போன்ற இளம் செயல் வீரர்களிடம் பொறுப்பைக் கொடுக்கலாமா?'' என்ற சிந்தனையும் காங்கிரஸில் இருக்கிறதாம்.

- சஞ்சயன்

கொட்டும் மழை
ஆசையாய் நனைகிறேன்
கரைந்து போகிறது
அம்மாவின் மனது
காய்ச்சல் வருமோ என்று...



ஜி.ரெஜினா பானு

# அபிராமிக்கு முதல் மரியாதை!



"ரெண்டு சிவன். ரெண்டு அம்மன் கொண்ட சிவாலயத்தை திண்டுக்கல்லைத் தவிர வேறெங்கேயும் பார்க்க முடியாது. அவ்வளவு சிறப்பு வாய்ந்தது காளஹஸ்தீஸ்வர சுவாமி திருக்கோயில். காளஹஸ்தீஸ்வரருக்கு ஞானாம்பிகை, பத்மகிரீஸ்வரருக்கு அபிராமியம்மன். இப்படி இரட்டை ஆசீர்வாதம் பெற்ற ஊர் திண்டுக்கல்"- ஊர்ப் பெருமையையும், கோயில் பெருமையையும் அடுக்கிக்கொண்டே போகிறார் திண்டுக்கல் வாசியான கோவிந்தராஜன்.



"இந்தக் கோயில்ல ரெண்டு சிவன், ரெண்டு அம்மன் இருந்தாலும், முதல் மரியாதை அபிராமிக்குத்தான். ரெண்டு சிவன், ரெண்டு அம்மன் வந்தது பெரிய கதை. இப்போ இருக்கற காளஹஸ்தீஸ்வர கோயில், ஒரு காலத்தில், பத்மகிரீஸ்வரருக்கும், அபிராமி அம்மனுக்கும் இளைப்பாறும் மண்டபமா இருந்தது. அவங்க ரெண்டு பேரும் மலைக்கோட்டையிலதான் இருந்தாங்க. உற்சவ நேரத்துல மட்டும்தான் இங்க வருவாங்க. ஹைதர் அலி காலத்துலதான் கோட்டைப் பாதுகாப்புக்காக, பத்மகிரீஸ்வரரையும், அபிராமி அம்மனையும் நிரந்தரமாக இப்ப இருக்கற காளஹஸ்தீஸ்வர கோயில்ல பிரதிஷ்டை பண்ணிட்டாங்க" என்கிறார் கோவிந்தராஜன்.

"உற்சவம் பத்மகிரீஸ்வரருக்கும் - அபிராமிக்கும் தான். மலைக்கோட்டையிலிருந்து கோயிலுக்கு மாறிய இவர்கள் உற்சவ தெய்வங்களாக இருப்பதாலோ என்னவோ, திண்டுக்கல்லுக்குப் பிழைக்க வந்தவர்கள்தான் இன்றைக்கு வசதியாக இருக்கின்றனர். எல்லாம் அபிராமி அன்னையின் செயல்" என்றவர் இத்திருக்கோயில் சிறப்பையும் சொல்கிறார்.




"ராகு, கேது, பெயர்ச்சிக்கு இங்கே வந்து வழிபட்டால் ஆந்திராவின் காளஹஸ்தீஸ்வரர் கோயிலுக்குச் சென்று வழிபட்டதற்குச் சமம். சித்திரை மாதம் கார்த்திகை நட்சத்திரத்தில் கொடியேற்றம். பன்னிரண்டு நாள் நடக்கும் திருவிழாவில் பத்தாம் நாள் திருக்கல்யாணம், பதினொன்றாம் நாள் தீர்த்தவாரி, பன்னிரண்டாம் நாள் திருவிழா. திண்டுக்கல்லில் நடக்கும் மிகப் பெரிய திருவிழாவில், அபிராமி அம்மன் அருள்பாலிக்கும் இந்தத் திருவிழாவும் ஒன்று" என்கிறார் கோவிந்தராஜன்.

இரண்டு சிவன் - இரண்டு அம்மன் அருள்பாலிக்கும் காளஹஸ்தீஸ்வரர் கோயிலுக்கு வந்து வழிபட்டால் இரட்டை ஆசீர்வாதம்தான்! ●




# கல்கி



2010 பிப்ரவரி 7
விரோதி தை 25
மலர் : 68
இதழ் : 28


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்

## வைரவிழா மேடையில் வாய்ப்பந்தல்!

“செல்வாக்கு மிகுந்த அரசியல்வாதிகள்கூட தேர்தல் கமிஷனைக் கண்டு பயப்படுகிறார்கள். இது தேர்தல் கமிஷனின் நேர்மைக்கும் நியாயச் செயல்பாட்டுக்கும் சான்று...” என்று பாராட்டியிருக்கிறார் சுஷ்மா ஸ்வராஜ்!

இந்தப் புகழாரம், நமது நாட்டு அரசியல்வாதிகள், தேர்தல் கமிஷனிடம் பயப்படும் அளவுக்குத் தப்புச் செய்கிறார்கள் என்பதையும் சேர்த்தே உணர்த்துகிறது!

சுஷ்மா ஸ்வராஜ் மட்டுமின்றி, அனேகம் அரசியல் தலைவர்களும் தேர்தல் கமிஷன் வைர விழாவில் பேசுகையில், ‘தேர்தலில் பண பலம் - அடியாள் பலம் புகுந்து விளையாடுவது களையப்பட வேண்டும்; குற்றப் பின்னணி உடையவர்களைத் தேர்தலில் வேட்பாளர்களாக நிறுத்த அனுமதிக்கக்கூடாது; தேர்தல்கள் அமைதியாகவும் நியாயமாகவும் நடக்க வேண்டும்’ என்றெல்லாம் ‘பரிந்துரை’த்திருக்கிறார்கள்! குடியரசுத் தலைவரில் தொடங்கி, துணை ஜனாதிபதி அன்ஸாரி, சோனியா காந்தி, மன்மோகன் சிங், மீரா குமார் என ஒருவர் விடாமல் அவ்வளவு பேரும், ஏதோ தேர்தல் கமிஷனின் முயற்சியால்தான் அனைத்தும் சரியாக வேண்டும் என்பது போலப் பேசியிருப்பது விசித்திரம்!

பண பலம், முறைகேடுகள், கிரிமினல் பின்னணி போன்றவற்றை தேர்தல் கமிஷன் வலுவாகக் கண்டித்து நடவடிக்கை எடுத்து வருவதால்தான், கடந்த சில தேர்தல்கள் ஓரளவுக்கேனும் நியாய மாக நடந்து முடிந்தன. அத்தேர்தல்களில் நிகழ்ந்திருக்கக்கூடிய விதிமீறல்கள், முறைகேடுகளுக்கு, அவற்றை மேற்கொண்ட கட்சிகளும் அதன் தலைவர்களும்தான் காரணமேயொழிய தேர்தல் கமிஷன் அல்ல!




தேர்தல் களம் தூய்மை செய்யப்பட வேண்டுமானால், அரசியல்வாதிகள்தான் அதற்கு மனம் வைத்து உழைக்க வேண்டும். தேர்தல் கமிஷன் மட்டுமே அதைச் சாதிக்க முடியாது. தற்போது அக்கமிஷனுக்கு உள்ள அதிகாரங்கள் வரம்புக்குட்பட்டவை. அவற்றைக் கொண்டு தேர்தல்களை முறைகேடின்றி நடத்துவதே பிரம்மப் பிரயத்தனமாக இருக்கிறபோது, ஜனநாயக அமைப்பை அக்கமிஷன் எவ்வாறு சீர்செய்ய முடியும்?

கிரிமினல் பின்னணி உள்ள வேட்பாளர்களை நிறுத்துவது அரசியல் கட்சிகள்தான் - இதில் காங்கிரஸ் முன்னணி வகிப்பதாகத் தெரிகிறது; அடுத்து வருவது பி.ஜே.பி!

உட்கட்சி ஜனநாயகத்தை மதிக்காமல், நியமன அடிப்படையில் தலைவர்களை 'உருவாக்குவது'ம் அரசியல் கட்சிகள்தான். இந்தக் கட்டத்திலேயே பண பலமும் அடியாள் பலமும் விளையாட ஆரம்பித்து, தேர்தலின்போது தொடர்கின்றன.

ஆக, சோனியா காந்திகளும் சுஷ்மா ஸ்வராஜ்களும்தான் தங்கள் வீடுகளை (கட்சிகள்) முதலில் சுத்தப்படுத்திக் கொள்ள வேண்டும். கட்சி அரசியல் முறைப்படுத்தப்பட்டு தூய்மையானால்தான் தேர்தல் களம் சுத்தமடையும்.

இப்போதுள்ள நிலையில் தேர்தல் கமிஷனின் பணி மிகக் கடுமையானதாக இருக்கிறது. ஏனெனில், சட்டங்களை ஏய்ப்பதையும், கண் துடைப்பு வித்தைகள் நிகழ்த்துவதையும், மக்களை விலைக்கு வாங்குவதையும் ஒரு கலையாகவே கச்சிதப்படுத்தி வைத்துள்ளனர் அரசியல் வாதிகள்.

ஒன்று, அவர்கள் திருந்த வேண்டும்; அல்லது அவர்களைக் கட்டுக்குள் வைக்கும் அளவுக்குத் தேர்தல் கமிஷனின் அதிகாரத்தை உயர்த்த, அவர்களே சட்டத் திருத்தம் கொண்டு வர வேண்டும். இரண்டுமின்றி, வைரவிழா மேடையில் வெறும் வாய்ப்பந்தல் போடுவதில் ஒரு புண்ணியமும் இல்லை!

## வட்டமேஜை

ரமணனின் 'போர்க் களம் போகலாமா?' கட்டுரை புண்ணிய பூமியைத் தரிசித்த மன நிறைவை ஏற்படுத்தியது.

- மு.மதிவாணன், அரூர்.

இசை மேதை ஜி.என்.பி. நூற்றாண்டு நினைவுகளில், அவரது பரந்த நோக்கும், சங்கீதம் எல்லோரையும் சென்றடைய வேண்டும் என்கிற அவரது எண்ணமும் சிலிர்ப்பைத் தந்தன.

-என்.பாலசுப்பிரமணியன், சென்னை-40.

ராகுல் காந்தி, மாலையோடு காத்திருப்பது போல் போட்டிருக்கும் கருத்துப் படம் சூப்பர். அவர் விரும்புபவர்கள் மாதிரி கட்சிக்கு ஆள் வேண்டுமென்றால் சான்ஸே இல்லை; மாலை அவர் கையிலேயே இருக்க வேண்டியதுதான்!

- எம்.மிக்கேல்ராஜ், சாத்தூர்.

பணம் காய்ச்சித் தொழிலாக நகர்ப் புறங்களிலேயே டாக்டர்கள் தங்கிவிடுகிறார்கள். இந்த நிலையில் அரசாங்கம் என்ன செய்ய முடியும்? சட்டம் போட்டால் முரண்டு பிடிக்கிறார்கள். எனவே, புதியதாகக் குறுகிய கால மருத்துவப் படிப்பை, கிராம மக்களுக்காகத் தொடங்க வேண்டியது கட்டாயமாகிறது. எதையுமே குற்றம் நோக்கில் பார்த்தால் அதில் உள்ள நல்ல விஷயங்களை என்றுமே காண முடியாது. உயர் நிலையை அடைய மக்கள் அனைவரின் ஒத்துழைப்பும் அவசியம்!

-எஸ்.கோபாலன், நங்கநல்லூர்.

புத்தகம் பற்றியும் புதுக்கவிதை பற்றியும் ஞானக்கூத்தன் கூறிய பதில்கள் அட்சர லட்சம் பெறும்.

- இரா.கல்யாண சுந்தரம், அனுப்பானடி.

'மது விற்பனை அபரிமிதம். மருத்துவக் காப்பீடு அமோகம்' என்று தலையங்கம் படித்தேன். மதுவின் தீவிரம் அறிந்தும் இந்த கொல் மதுவைத் தமிழகத்தில் குடிக்காதவர் களைக் கூடக் குடிக்கத் தூண்டும் வகையில் தெருவுக்கு ஒரு 'டாஸ்மாக்' கடை வைத்தது ஏன்?

-இ.சரோஜா, விருகம்பாக்கம்.

நெட் ஷூட்டில் இடம்பெற்ற ஆறு அசத்தல் படங்களும் செம சூப்பர்... எங்கள் குட்டீஸ்களுக்கு ரவுசு கலந்த மகிழ்ச்சியை உண்டாக்கி விட்டது. 'சுப்பீரியர் தேங்க்ஸ்'!

-அப்ஸரா, புதூர்.

### திருத்தம்....

கல்கி 31.1.2010 இதழின் 'நீங்கள் கேட்டவை-தராசு' கேள்வி பதில் பகுதியில், புதுச்சேரி வாசகர் தாமஸ் மனோகரன் கேட்ட கேள்விக்கு, தராசு அளித்த பதிலில் தா.கிருட்டிணன் கொலை வழக்கு என்பதற்குப் பதிலாக கு.ப.கிருஷ்ணன் கொலை வழக்கு என்று தவறுதலாக வெளியாகி விட்டது. திருத்தி வாசிக்கும்படி கேட்டுக் கொள்கிறோம். தவறுக்கு வருந்துகிறோம்.

-(ஆர்.)

## சுப்பீரியர் தேங்க்ஸ்!

# கொடைக்கானல் துளிகள்!

மலைகளின் இளவரசி வளைத்து வளைத்து அழைத்துப் போகிறாள் தன் வசீகர உச்சிக்கு. பார்வைகளால் முகிலினங்களில் ஈரம் அருந்தி தாகம் தணிகிறது வெப்பமான மனசு. கிட்டத்தட்ட 7000 அடி சொர்க்கமாக இருக்கும் கொடைக்கானல், கடவுளின் கெஸ்ட் ஹவுஸ் என்பதை... அருவிகளும், இருளின் ஆதிக்கத்தில் இருக்கும் பள்ளத்தாக்குகளும், குளிர்கொடுத்து இதமாக்கும் சீதோஷ்ணமும், வளைந்துபோகும் சாலைகளில் உள்ள அபாயங்களும் உணர்த்திக்கொண்டே இருக்கின்றன. குளு குளு கொடைக்கானலின் கொண்டாட்டமான பகுதிகள் குறித்த செய்திகள் சில...

## சில்வர் காஸ்கேட்



இதுதான் கொடைக்கானல் குளிருக்கான என்ட்ரன்ஸ். அதன் ஃபர்ஸ்ட் வியூ ஸ்பாட் என்றுகூடச் சொல்லலாம். இங்கிருக்கும் நீர்வீழ்ச்சி வெள்ளியை உருக்கி ஓட விட்டதுபோல இருப்பதால் சில்வர் காஸ்கேட் என்று பெயராம். பெங்களூர் பிருந்தாவன் கார்டனில் நீரூற்றுக்குப் போடப்பட்டிருக்கும் லைட் போலவே, இந்த நீர்வீழ்ச்சிக்கும் மின்விளக்கு அலங்காரம் படு ஜோர். அருவி விழும் இடத்திலிருந்து உருவாகும் ஆறு, மஞ்சளாற்றில் கலக்கிறது. கிட்டத்தட்ட நூறடி உயரத்திலிருந்து விழும் நீர்வீழ்ச்சி, மனசைக் குளிப்பாட்டி மலைக்கு அனுப்பி வைக்கிறது.

## சலேத் அன்னை ஆலயம்

கொடைக்கானல் டவுனிலிருந்து வடக்கே ஐந்தாவது கிலோமீட்டரில் இருக்கிறது லா சலேத் சர்ச். உலகத்திலேயே சலேத் மாதா ஆலயங்கள் இரண்டு இடங்களில்தான் இருக்கின்றன. ஒன்று ஃபிரான்ஸில்; மற்றொன்று கொடைக்கானலில்! ஆகஸ்ட் 15ல் கொடைக்கானலில் நடக்கும் மிகப் பெரிய உள்ளூர் விழா, சலேத் மாதா திருவிழாதான். திருவிழாவின்போது வத்தலகுண்டு, திண்டுக்கல்லிலிருந்து பத்தாயிரத்துக்கும் மேற்பட்டோர் சலேத் மாதாவை வணங்க வருகின்றனர். பிரான்சின் பழைமை மிக்க கட்டடக் கலையின் அழகோடு கட்டப்பட்டிருக்கும் இந்த ஆலயம் கொடைக்கானலின் வேளாங்கண்ணி.



ஊட்டி மலர்க்கண்காட்சிக்கு இணையானது ப்ரையண்ட் பூங்கா மலர்க் கண்காட்சி. கண்காட்சி நேரத்தில் பூங்காவைப் பார்த்தால், தேவதைகள் உலா வரும் நேரம் இதுதானோ என்று மனம் மயங்கும். பூங்காவின் அருகில் இருக்கிறது 1000 வருடப் பழைமையான போதிமரம். மரத்தினடியில் தியானபீடமும் இருக்கிறது. மலர்களின் நிறத்தையும், மணத்தையும் மனசுக்குள் வாங்கி, கண் மூடினால் நமக்குள் அமைதி கொடைக்கானல் பனி போல கவிய ஆரம்பிக்கிறது. ஈரத்தோடு விழும் மாலை சூரிய ஒளியில், இறைவன் வரைந்து வைத்த வண்ண ஓவியம் போலத் தோற்றம் கொள்கிறது பூங்கா.



பிரையண்ட் பார்க்




# கடவுளின் கெஸ்ட் ஹவுஸ்!

திண்டுக்கல்லின் கோடம்பாக்கம் என்றால் அது கொடைக்கானல்தான். தமிழ்ப் படம் மட்டுமல்லாது மலையாளப் படங்களின் ஒரு காட்சியிலாவது கொடைக்கானல் வந்துவிடும். அந்த அளவுக்கு கேமராவால் சுடப்பட்ட இடம்! கொடைக்கானலை மையமாக வைத்து எடுக்கப்பட்ட தமிழ்ப் படங்கள் ஏராளம். திண்டுக்கல்லின் பைன் ஃபாரஸ்ட்டில்தான் தெனாலி படம் முழுக்கமுழுக்க எடுக்கப்பட்டது. சமீபத்தில் எடுக்கப்பட்ட புகைப்படம் என்கிற திரைப்படம் ஆரம்பம் முதல் முடிவுவரை கொடைக்கானலில்தான் எடுக்கப்பட்டது. பைன் ஃபாரஸ்ட்டில் ஒரு ஷாட் வைத்தால் அந்தப் படம் சூப்பர் ஹிட் ஆகும் என்பது கோடம்பாக்கத்தின் ஏடாகூட சென்டிமென்ட்!



பைன் ஃபாரஸ்ட்

# கொடைக்கானல் துளிகள்!



## டம் டம் ஃபால்ஸ்

கொடைக்கானல் மலையின் அடிவாரத் துவக்கம் இங்கே இருந்துதான். இங்கு கயிறு போலத் தொங்கும் அருவிக்கு எலிவால் அருவி ஒன்று பெயரிட்டு இருக்கின்றனர். இங்கிருக்கும் வியூ டவர் மீது ஏறிப் பார்த்தால், அதல பாதாளத்தில் மஞ்சளாறு கண்களை நனைக்கிறது. கூடவே மஞ்சளாறு டேமும் நம்மை அசத்தும் காட்சியாக வீற்றிருக்கிறது. மஞ்சளாறுதான் பெரியகுளம் ஊருக்கு பசுமை வழங்கும் கொடையாளி.

திண்டுக்கல்லின் மாயாஜாலம் கொடைக்கானல் எனில், கொடைக்கானலின் மாயாஜாலம் தொப்பி தூக்கிப் பாறை. இது அழகான ஆபத்தைக் கருக்கொண்டிருக்கும் கருவறை. இங்கே சுழலும் மாயக்காற்று, ஒரு பொருளையும் தனக்குள் விழவிடாது மேலேயே வீசும்; குறிப்பாகத் தொப்பிகளை! எனவேதான் இது தொப்பி தூக்கிப் பாறை. மனசைத் தூக்கிப் போடாமல் இருந்தால் சரி!



## தொப்பி தூக்கி பாறை

இங்கே செயற்கையாக நிறுவப்பட்டு பிறகு இயற்கை சுவீகரித்துக்கொண்ட லேக் பேரிஜம். ரொம்பும் சின்னது. ஆனால் மிக விசேஷமானது. இதன் மூலிகைத் தண்ணீர் பல ஜீவன்களை இன்னும் ஆதி குணம் மாறாமல் வைத்திருக்கிறதாம். இதன் பக்கத்திலிருக்கும் மதிகெட்டான் சோலை மிகவும் பயங்கரமான காட்டுப் பகுதி. இங்கே மையமாக வீசும் மூலிகைக் காற்று மனசைக் குழப்பிவிடும் என்பதால்தான் மதிகெட்டான் சோலை என்று பெயராம்.







சில ஆண்டுகளுக்கு முன்புவரை இந்தப் பகுதி அழைக்கப்பட்டது சாத்தானின் சமையலறை என்றுதான். நடக்கும்போதே சில இடங்கள் மனிதர்கள உள்வாங்கிப் புதைத்துக்கொண்டு, சற்றே புகை போன்ற காற்றைக் கக்குவதால் இது சாத்தானின் சமையலறையாம்! குணா படத்தின் 'கண்மணி அன்போடு' பாடல் இங்கேதான் படமானது. அன்றுமுதல் இப்பாறை 'குணாகேவ்' என்றழைக்கப் படுகிறது. ◦

● எம்.மிக்கேல் ராஜ், சாத்தூர்

**வானவில் ஏன் வளைந்து காணப்படுகிறது?**

கோகுலத்தை அழிக்க இந்திரன் குளிர் மழையைக் கொட்டியபோது, கோவர்த்தன குன்றேந்தி ஆயர்களைக் காத்தான் கண்ணன். தன் பாச்சா பலிக்காத இந்திரன், கண்ணனோடு தான் கொண்ட cold-warல் தோற்று வளைந்து கொடுத்ததைத் தெரிவிக்க, வளைந்த வானவில்லால் வானத்திலிருந்து பூமிக்கு சமாதான சிக்னல் காட்டினான். வானவில் வெண்பா கீழே:

''ஆனவரை பெய்த அடைமழையை ஆயர்கள்
காணவரை ஏந்திய கண்ணனிடம் - நாணமுற
வானவர்கோன் தோற்று வளைந்தான், சமாதான
வானவில்லை அம்புவிக்கு விட்டு''....

● ஆர்.கோபாலன், மேற்கு மாம்பலம்.

**இல்லற வாழ்வில் இசைக்கும் 'சப்தஸ்வரங்கள்' எவை?**

மனைவி 'சரிகமபதநி'யை ரீமிக்ஸ் செய்து, சூசகமாக, ''சரி கம(முனுகிட) பதி நீ '' என்று பாட, கணவன் சப்தநாடியும் அடங்கி 'நிசப்த ஸ்வரமாக' நிற்பான்!

# கிரேஸியைக் கேளுங்கள்



● லாவண்யா, பெங்களூரு

**உங்களுக்குப் பிடிச்சது ஷாருக்கானா, சல்மான்கானா, ஆமீர் கானா?**

சினிமா இடைவேளையில் சாப்பிடும் 'பாப்கார்ன்'!

● ஆர்.அஜிதா, கம்பம்.

**உங்களிடம் உங்களுக்கே பிடிக்காத விஷயம்?**

என்னிடம் எனக்குப் பிடித்ததையே செய்வது!

● ச.ஆ.கேசவன், இனாம்மணியாச்சி

**நடந்து செல்கையில் செருப்பு நம்மைச் சுமக்கிறதா, இல்லை செருப்பை நாம் சுமக்கிறோமா?**

உடலை நாம் சுமக்கிறோமா இல்லை நம்மை உடல் சுமக்கிறதா? சுகமான சுமை ஒன்று சொல்லட்டுமா. ராமன் காலில் சுமந்த சுமையை, பரதன் தலையில் சுமந்தான். 'தம்பியுடையான் நடைக்கு அஞ்சான்!'

● ஜி.பாலசுப்ரமணியன், விருதுநகர்

**காதலியிடமும், மனைவியிடமும் சொல்லக் கூடாத விஷயம் ஏதேனும் உண்டா?**

காதலிப்பதை மனைவியிடமும், கல்யாணம் ஆனதை காதலியிடமும் சொல்லக் கூடாது.



● ஜி.மஞ்சரி, கிருஷ்ணகிரி

**அறிவு, ஞானம் என்ன வித்தியாசம்?**

அறிவு ஆறு ஆவது; ஞானம் ஆறுவது!

● மஞ்சுவாசுதேவன், அயிரோலி

**கூட்டுக் குடும்பத்தின் ப்ளஸ் என்ன?**

சம்பாத்தியத்தில் ஆரம்பித்து சந்தோஷம் வரை எல்லாமே Surplus!

● பி.பாரதி, ஹூப்ளி.

**ரகசியத்தைக் கட்டிக் காக்க பெண்களால் முடியாது என்பது உண்மையா? ஆண்கள்தான் ரகசியத்தைக் காப்பாற்றுகிறார்களா?**

மிக உயர்ந்த ரகசியத்தையே 'சிதம்பர ரகசியம்' என்று ஆண் பாலில்தானே குறிப்பிடுகிறார்கள். 'சிவகாமி ரகசியம்' என்று யாரும் சொல்வதில்லையே!

● எம்.அசோக்ராஜா, திருச்சி

**நன்றி, விசுவாசம் என்ன வித்தியாசம்?**

வாலை ஆட்டினால் நன்றி; தலையை ஆட்டினால் விசுவாசம்.

● என்.சண்முகம், திருவண்ணாமலை

**உங்களுக்கு உழவுத் தொழிலைப் பற்றி என்ன தெரியும்?**

உலகம் முழுவதும் ஒப்புக்கொண்ட ஒரே கல்ச்சர் 'Agree-culture'!

● அ.கு.கிருஷ்ணன், புதுச்சேரி

**துன்பம் வரும்போது எப்படிச் சிரிக்க முடியும்?**

ஆனந்தக் கண்ணீர் வரலாம். அழுகை சிரிப்பு வரக்கூடாதா?

● அ. முரளீதரன், மதுரை

**அரசியல் பற்றிய கேள்விகளைத் தவிர்த்து விடுவது ஏன்?**

சரி; தவிர்க்காமல் உங்கள் கேள்வியைப் போட்டாச்சு போதுமா? இப்ப திருப்தியா!

'சாரங்' - சென்னை ஐ.ஐ.டி. மாணவர்களால் நடத்தப்படும் வருட உற்சவம்! இந்தியாவில் பல கல்லூரி மாணவர்கள் படையெடுத்து வந்து பல்வேறு போட்டிகளில் பங்கேற்பது வழக்கம்தான். இந்தமுறை கமல்ஹாசனை வி.ஐ.பி. விருந்தாளியாக அழைத்திருந்தார்கள்.

வரவேற்பு பலம்தான். ஆனால் ரசிப்பார்கள் என்று கமல் நினைத்த பல இடங்களில் மௌனமே விடையாகக் கிடைத்தது. (ஒரு கட்டத்தில் 'இந்த இடத்தில் உங்களது கைத்தட்டலை எதிர் பார்த்தேன். ஆனால் சற்று தாமதமாகத்தான் அது கிடைத்திருக்கிறது' என்று கமல் வெளிப்படையாகவே கூறினார்).

''யானையால் பின்னங்கால்களினால் மட்டும் நிற்க முடியும். ஆனாலும் நான்கு கால்

# "நான்



களில் நிற்கவும் நடக்கவும்தான் அதற்குப் பிடிக்கும். என் படங்களைக் கொண்டு என்னை எடை போட வேண்டாம். நான் ஏற்கும் பாத்திரங்களைவிட நான் தைரிய மானவன். யாருடைய சான்றிதழும் எனக் குத் தேவையில்லை. ஆனால் சினிமா வுக்கு வியாபாரம் தேவைப்படுகிறது'' என்றார்.

'சினிமாவை இனி 'சினிமா என்று அழைப்பதே சரியில்லை' என்றும் கூறி னார். பிறகு? 'அசையும் நிழற்படங்கள்' (moving images) என்று அழைப்பதுதான் பொருத்தமாம்.

''மாணவர்களின் கேள்விகள் என என்னிடம் அளிக்கப்பட்டவற்றுக்கான என் பதில்களைக் கூறுகிறேன்'' என்றபடி ஒரு பட்டியலை எடுத் துக்கொண்டு அதிலி

# "...தைரியமானவன்!" -கமல் பேச்சு



ருந்த வினாக்களுக்கான விடைகளை அடுக்கினார்.

**★ திரைத் துறையில் உங்கள் முதல் அனுபவம் எப்படி இருந்தது?**

இந்தக் கேள்வி 'உங்கள் தாய்மொழி யில் நீங்கள் முதலில் வார்த்தையை அறிந்து கொண்டது எப்போது?' என்பதைப் போன் றது. நான் கண்விழித்ததே திரைத் துறை யில்தான்.

**★ பலவித பாத்திரங்களை ஏற்று நடித்திருக்கிறீர்கள். எதனுடன் உங்களை அதிகமாக அடையாளப்படுத்திக் கொள் கிறீர்கள்?**

கமல்ஹாசன்தான் (!)

**★ இந்தியாவில் இளைஞர் சக்தி எக் கச்சக்கமாக உள்ளது. இதை 'க்ரியேட்டி வாக' திரையில் பயன்படுத்திக் கொள்ள உங்கள் ஆலோசனை என்ன?**

நாங்கள் எடுக்கும் திரைப்படங்களை அளவுகோலாகக் கொண்டால் உங்களுக்கு ஆலோசனை சொல்லும் தகுதி எங்களுக்கு இல்லை.

**★ ஒரு திரைப்படம் வெற்றி அடைந் தது என்பதற்கான உங்கள் அளவுகோல் என்ன?**

என்னைச் சுதந்திரத்தோடு பணியாற்ற

அனுமதித்தாலே அதை வெற்றியாகத்தான் எண்ணுவேன். விமர்சகர்களைப் பொறுத்த வரை எந்தப் படத்தினாலும் அவர்களைத் திருப்திப்படுத்தவே முடியாது. ஒருவிதத்தில் நானும் அப்படித்தான். மறுதரப்பில் வசூலில் ஒருபோதும் மகிழ்ச்சி அடையாத வர்கள். செலவழித்த தொகையைப் போல 400 சதவிகிதம் திரும்பி வந்தாலும் திருப்தி அடையாதவர்கள்.

**★ இந்தியா தினமும் தீவிரவாதிகளிடமிருந்து சாதாரண மனிதனைக் காப்பாற்ற எட்டு லட்சம் ரூபாய் செலவிடுகிறது. இந்த நிலையில் உன்னைப்போல் ஒருவன் போன்ற திரைப்படம் சாதாரண மனிதனை எந்தவிதத்தில் பாதிக்கிறது?**



## "என் நடிப்பு என்னைப் பொறுத்தது மட்டுமல்ல... அது ஒரு ஜனநாயகச் செயல்பாடு!"

தீவிரவாதத்தினால் தேசத்துக்கு இவ்வளவு செலவு உண்டாகிறது என்பது சாதாரண மனிதனைக் கோபப்படுத்துகிற விஷயம்தான். அந்தக் கோபத்தை உன்னைப்போல் ஒருவன் மூலம் தூண்டினோம்.

**★ ஐம்பது வருடங்களாக நடித்து வருகிறீர்கள். திரையுலக மாற்றங்களை எப்படி ஏற்றுக் கொள்கிறீர்கள்?**

மிகவும் கடினமாகத்தான் இருக்கிறது. என் நடிப்பு என்பது என்னைப் பொறுத்தது மட்டுமல்ல. அது ஒரு ஜனநாயகச் செயல்பாடு! சொல்லப்போனால் இயக்குநர் கூட முழு சுதந்திரமாகச் செயல்படுகிறார் என்று கூற முடியாது. அதேசமயம் இயக்குநரின் கையில் உள்ள வண்ணங்கள் மட்டும்தான் நடிகர்கள் என்று அவர்கள் நினைத்துவிடக் கூடாது.

பதிலளித்துவிட்டு கமல் கிளம்ப முயற்சிக்க, அவசர அவசரமாக நிகழ்ச்சி ஒருங்கிணைப்பாளர், ''மாணவர்களின் நேரடிக் கேள்விகளுக்கும் பதில் சொல்ல வேண்டும்'' என்று கூற, கமல் சற்றே தயக்கத்துடன் ஒப்புக்கொண்டார். தொடர்ந்தன கேள்விகள்.

**★ ஹே ராம், விருமாண்டி என்று உங்கள் இயக்கத்தில் வந்த படங்களில் மெஸேஜும் இருந்தது. ரசிக்கும்படியும் இருந்தன. அப்படிப்பட்ட படங்களை அதற்குப் பிறகு அளிக்காதது ஏன்?**

உங்களுக்கு அது ரசனை. எனக்கு அது மாபெரும் செலவு.

**★ 'தசாவதாரத்'தில் எதற்காக நீங்கள் பத்து வேடங்களில் நடித்தீர்கள். அதற்கான அவசியம் என்ன?**

அது ரசிக்கப்படும் என்று கூறினார்கள் தவிர ஏற்கெனவே ஒருவர் ஒன்பது வேடங்களில் நடித்துவிட்டார். அதனால் பத்தாக இருக்கட்டுமே என்று முடிவு செய்யப்பட்டது.

கமல்ஹாசனின் நிகழ்ச்சிக்கு மாணவர்கள் பெரும் திரளாக வந்திருந்தனர். எனினும் நிகழ்ச்சி முடிவில் பல மாணவர்கள் தங்கள் ஏமாற்றத்தையும் வெளிப்படுத்தினார்கள். ''வழக்கமாக வி.ஐ.பிக்களிடம் நிறைய கேள்விகள் கேட்டுப் பதில் பெறுவதுதானே ஐ.ஐ.டி. வழக்கம். கமல் ஏன் இரண்டே நேரடிக் கேள்விகளுக்கு மட்டுமே பதில் சொல்லிவிட்டுச் சென்றார்? சொல்லப்போனால் இந்த நிகழ்ச்சிக்காக ஒப்புக் கொள்ளப்பட்ட நேரம் கூட முடியவில்லையே!''.

– **ஆதர்ஷ்**



# சோ
எழுதிய

# ஹிந்து மஹா சமுத்திரம்



வேதங்கள் தொடங்கி, உபநிஷத்துக்கள் வழியே வேதாந்த சிகரத்தில் ஏறி; சாத்திரம் கண்டு; புராணங்கள் வழங்கி, ஆலயங்கள் எழுப்பி; பக்தி வளர்த்து; சரித்திரம் எழுதி; நீதி பல வகுத்து; சட்டம் இயற்றி; சமூக சிந்தனையில் ஆழ்ந்து; விஞ்ஞானம்; கணிதம்; இலக்கியம்; வான சாத்திரத்தை அதன் கரையோரத்தில் நின்று பார்த்தவருக்கு ஏற்பட்ட பிரமிப்பை, மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்கிறார்.

**முதல் பாகம்** — ரூ.200.00

யுகங்களின் காலக்கணக்கு, பெயர்க்காரணம், யாகங்கள், தெய்வங்கள், உருவங்கள், வாஹனங்கள், வேதங்கள், உபநிஷத்துக்கள், தத்துவங்கள், எமதர்மன் உபதேசங்கள், மரணத்திற்குப் பின், வருணனின் உபதேசம், நாரதர் பெற்ற உபதேசங்கள், ப்ரம்ம ஸூத்ரம் - போன்ற பல தகவல்கள்.

**இரண்டாம் பாகம்** — ரூ.250.00

ஷடங்கங்கள், ஸ்ம்ருதிகள், தர்மம், சட்ட தத்துவங்கள், அர்த்தசாஸ்திரத்தில் கூறப்படும் அரசு நிர்வாகம், பிரம்ம புராணம், பத்ம புராணம், விஷ்ணு புராணம், சிவ புராணம், நாரத புராணம், மார்க்கண்டேய புராணம், அக்னி புராணம், பவிஷ்ய புராணம், பிரும்ம வைவர்த்த புராணம், லிங்க புராணம், வராஹ புராணம், ஸ்கந்த புராணம், மத்ஸ்ய புராணம், கருட புராணம், ப்ரும்மாண்ட வாயு புராணங்கள், ஸ்ரீமத் பாகவதம் - போன்றவை அடங்கியது.

**மூன்றாம் பாகம்** — ரூ.200.00

ராமாயணம், மஹாபாரதம், ஸ்ரீமத் பகவத் கீதை, யோக வாஸிஷ்டம். போன்றவை அடங்கியது.

**நான்காம் பாகம்** — ரூ.150.00

மூன்று ஆச்சார்யர்கள் (ஆதி சங்கரர், ஸ்ரீ ராமானுஜர், ஸ்ரீ மத்வாச்சாரியர்) வித்யாரண்யர், ஸ்ரீ வல்லபாச்சார்யர், ஸ்ரீ கிருஷ்ண சைதன்யர் - ஆகியவர்களைப் பற்றியும் தெரிவிக்கிறது

**ஐந்தாம் பாகம்** — ரூ. 250.00

அறுபத்து மூன்று நாயன்மார்கள், பன்னிரு ஆழ்வார்களைப் பற்றியது.

(அழகிய படங்களுடன், சிறந்த தாளில், நேர்த்தியான பைண்டிங் கொண்டது.)




(நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனம்)
(ப.எண்) 244, ராமகிருஷ்ணா மடம் சாலை, மைலாப்பூர், சென்னை-4
தொலைபேசி: 24641314 www.alliancebook.com
email: srinivasan@alliancebook.com

இளவரசரர் சார்லஸ் - டயானா திருமணம் நிச்சயமானது. திருமணம் லண்டனில். தேனிலவு? இங்கிலாந்துவாசிகள் விதவிதமாக யூகிக்கத் தொடங்கினார்கள். பலரது யூகமும் பொய்க்கும்படியான செய்தி அரண்மனையிலிருந்து வெளியானது. 'ஜிப்ரால்டெர்' தேசம்தான் தேர்வு செய்யப்பட்டிருந்தது.

அறிவிப்பு வந்த கையோடு ஸ்பெயின் மன்னர் கார்லோஸ் மற்றும் மகாராணி சோபியாவிடமிருந்து மறுப்பு அறிக்கை வெளியானது. ''ஸாரி, உங்கள் ஹனிமூன் ஜிப்ரால்டெரில் நடைபெற அனுமதி இல்லை.''

இது - இதுதான் ஜிப்ரால்டெர் நாட்டைப் பல வருடங்களாக ஆட்டி வைக்கும் தலைவலி. ஸ்பெயின், இங்கிலாந்து இரண்டுமே ஜிப்ரால்டெருக்குச் சொந்தம் கொண்டாடுவதில் சளைக்கவில்லை.

ஜிப்ரால்டெர் என்பதே 'ஜபால் தாரிக்' என்ற அரேபியப் பெயரின் ஸ்பானிஷ் மொழிபெயர்ப்புதான்.

1713ல் உண்டான சமாதான உடன்படிக்கையின்படி ஸ்பெயின், ஜிப்ரால்டெர் மீதான தனது ஆளுமையை பிரிட்டனுக்கு விட்டுக்கொடுத்தது. எனினும், அவ்வப்போது குறுக்கீடுகளும் உண்டு!

சொல்லப்போனால் 1950களில் ஸ்பெயின் சர்வாதிகாரியாக விளங்கிய ஃப்ரான்கோ, 1954ல் ராணி இரண்டாம் எலிசபெத் ஜிப்ரால்டெருக்கு விஜயம் செய்ததை அறிந்து கொதித்துப்போனார். அதுவும் 'பிரிட்டன் ஜிப்ரால்டெரைக் கைவசப்படுத்திய 250 ஆண்டு கொண்டாட்டத்துக்காக வருகை புரிந்திருப்பதாக' அரசி கூறியதில் அந்தக் கோபம் கொழுந்துவிட்டெரிந்தது. ஜிப்ரால்டெர் மற்றும் ஸ்பெயினுக்கிடையேயான எல்லையை (1.2 கிலோமீட்டர் தூரம் அமைந்த எல்லைக்கோடு இது) 'சீல்' வைத்தார்.

'இந்த இரு நாடுகளும் எதற்காக எங்கள் தலையெழுத்தை நிச்சயிக்க வேண்டும்?'. சிலிர்த்த ஜிப்ரால்டெர் அரசு வாக்கெடுப்பு ஒன்றை நடத்தியது. இனி சுயாட்சிதான். ஆனாலும் ஒரு ஒப்புக்குத் தலைவராக பிரிட்டனைத் தேர்ந்தெடுத்தது.

மே 1969ல் சுயாட்சி அரசியல் ஆணை ஒன்றை ஜிப்ரால்டெர் வெளியிட, ஸ்பெயின் அதைக் கடுமையாக எதிர்த்தது ஒருவழியாக செப்டம்பர், 2006ல் (பிரிட்டன், ஜிப்ரால்டெர், ஸ்பெயின் ஆகிய, முத்தரப்பும் ஸ்பெயினில் கூடிப்பேசி பல சிக்கல்களை ஒரு முடிவுக்குக் கொண்டு வந்தன. ஸ்பெயின் 'இனி ஜிப்ரால்டெர் எல்லையில் போக்குவரத்து தடைசெய்யப்படாது. ஜிப்ரால்டெரின் விமானங்கள் தங்கள் எல்லைமீது பறக்கலாம்' என்றது.

டிசம்பர் 2008 அன்று தனது நாட்டின் வரி விகிதத்தை முதல் முறையாகத் தானே முடிவுசெய்தது ஜிப்ரால்டெர். அப்போ ஜிப்ரால்டெர் 'இரு நாடு

## வாமன தேசங்கள்


* ஜிப்ரால்டெர் பாறை

களுக்கு இடையே சிக்கிச் சீரழிந்த தேசமா?' இல்லை. ஒரு நம்பகமான கணிப்பின்படி உலகின் ஐந்தாவது மிக நிலையான தேசம் என்ற பெருமை ஜிப்ரால்டெருக்கு அளிக்கப்பட்டது.

இப்படிச் சரித்திரம் படைத்த ஜிப்ரால்டெர் மெய்யாகவே பண்டைய சரித்திரத்திலும் தன் முத்திரையை வெகு ஆழமாகப் பதித்துள்ளது. கி.மு. 1,00,000 கால கட்டத்திலேயே மனிதன் இந்தப் பகுதியில் வாழ்ந்ததற்கான ஆதாரங்கள் உள்ளன.

இந்தப் பகுதியை எதற்காக பண்டைக் கால மனிதன் தேர்ந்தெடுக்க வேண்டும்? சார்லஸ் - டயானா தங்கள் தேனிலவுக்கு ஜிப்ரால்டெரைத் தேர்தெடுத்த காரணம் என்ன? இரண்டு கேள்விகளுக்கும் விடை கிட்டத்தட்ட ஒன்றுதான்!

சிறுத்தை, கரடியிலிருந்து, வாத்து ஆமைகள் வரை இங்குள்ள காடுகளில் வசிக்கும் விலங்கினங்கள் ஏராளம். ஆலிவ் மரங்களின் ஆதிக்கம் வேறு. பார்ப்பதற்கே ரம்மியமாக அமைந்துள்ளது ஜிப்ரால்டெர் பாறை. ஜிப்ரால்டெர் பாறையில் ஏறுவதே ஒரு சாகசம், இதை 'ராக் டூரிங்' என்றே பெயரிட்டு சுற்றுலாத்துறை வருமானம் பார்க்கிறது. அட்லாண்டிக் பெருங்கடல் மற்றும் மத்திய தரைக் கடலுக்கான ஒரே இணைப்பு இங்குதான்.

இமேரியன் தீபகற்பத்தின் தெற்கு நுனியில் அமைந்துள்ளது ஜிப்ரால்டெர். அதாவது ஐரோப்பாவும் ஆப்பிரிக்காவும் சந்திக்கும் பகுதி. முன்பு தனியாக இருந்த

✱ சார்லஸ் - டயானா



இயற்கை அழகு மிளிரும் நாடு ஜிப்ரால்டெர்.



# ஜிலு ஜிலு ஜிப்ரால்டெர்!

ஜி.எஸ்.எஸ்.

ஆப்பிரிக்கா 550 லட்சம் ஆண்டுகளுக்கு முன் ஐரோப்பாவுடன் ஒட்டிக்கொண்டது. காலப்போக்கில் மத்திய தரைக்கடலே வற்றி விட்டதாகவும், 50 லட்சம் ஆண்டுகளுக்கு முன் ஜிப்ரால்டெர் ஜலசந்தி வழியாக அட்லாண்டிக் கடல் பெருக்கெடுத்து மத்திய தரைக்கடலை நிரப்பியதாகவும் சரித்திரம் கூறுகிறது.

* ஜிப்ரால்டெர் பாராளுமன்றம்





* ராணி எலிசபெத்

★ வாட் வரி கிடையாது. எனவே இங்கு ஷாப்பிங் செய்ய வெளிநாட்டினர் அலைமோதுகின்றனர்.

★ ஜிப்ரால்டெரில் மேற்படிப்புக்கு வசதி இல்லை. பட்டப்படிப்பு தேவையா? பிரிட்டன் செல்லலாம். உதவித் தொகையை ஜிப்ரால்டெர் அரசு அளிக்கத் தயார். மருத்துவமனைகளில் எல்லா குடிமக்களுக்கும் இலவச சிகிச்சை உண்டு.

★ ஜிப்ரால்டெரில் விமானநிலையம் நகரின் மையத்திலேயே இருக்கிறது. புகைவண்டி, டிராம் வசதி எல்லாம் கிடையாது.

★ ஜிப்ரால்டெரின் தலைவி இன்னமும் ராணி எலிசபெத். ராணியின் சார்பாக கவர்னர் ஒருவர் ஜிப்ரால்டெரில் வசிப்பார். ஆனால் அவர் நாட்டின் எந்த முக்கிய நிகழ்வையும் தீர்மானிக்க மாட்டார்.

★ ஜிப்ரால்டெரை உண்மையில் ஆட்சி செய்வது முதலமைச்சர்தான். நான்கு வருடங்களுக்கு ஒருமுறை தேர்தலின் மூலம் தேர்ந்தெடுக்கப்படுகிறார்.

★ ஜிப்ரால்டெர் இப்போது ஐரோப்பிய யூனியனில் ஓர் உறுப்பினர். பத்து வருடப் போராட்டத்துக்குப்பின் 2004ல் ஜிப்ரால்டெர் மக்கள், ஐரோப்பிய பாராளுமன்றத் தேர்தலில் பங்கு கொண்டனர்.

★ ஐக்கிய நாடுகள் மட்டும் இன்னும் 'தன்னாட்சி புரியாத பகுதிகள்' என்ற பட்டியலில்தான் ஜிப்ரால்டெரை வைத்திருக்கிறது. விரைவிலேயே ஜிப்ரால்டெரை ஐ.நாவும் தனி நாடாக அங்கீகரிக்கும் என நம்பலாம்.

★ உலகின் மிக நெருக்கமான மக்கள் தொகை கொண்ட ஒரு நாடு.

★ இங்கிருக்கும் குரங்குகள் தனித்துவம் கொண்டவை. இந்தக் குரங்குகள் (Barbary Macaques) தொடர்பாக பலவித நம்பிக்கைகள் உண்டு. இந்தக் குரங்குகளின் எண்ணிக்கை குறைந்தால் இங்கிலாந்துக்கு ஆபத்து என்ற நம்பிக்கையும் நிலவுகிறது. வின்ஸ்டன் சர்ச்சில் கூட இது குறித்துக் கவலை தெரிவித்து, 'ஜிப்ரால்டெரில் குரங்குகளின் எண்ணிக்கை குறையாமல் பார்த்துக்கொள்ளுங்கள்' என்று ஜிப்ரால்டெர் தலைவருக்குக் கடிதம் எழுதியதுண்டாம்.

★ 78 சதவிகிதம் கத்தோலிக்கர்கள். இந்துக்களும் யூதர்களும்கூட உண்டு.

★ மக்களின் ஆயுள் மிக அதிகம். சராசரியே 80!

**(அடுத்த வாரம் இன்னொரு தேசம்...)**



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை - 63, போன் : 22760612, 22762299,29710350
City Office No.7, முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்,
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை - 600 033, போன் : 23714942

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 22 ஆண்டுகளாக நடைபெற்று வரும் ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய் தந்தையற்ற திக்கற்ற மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 150 மாணவர்கள் தங்கி படித்து வருகினறனர். மேலும் கூடுவாஞ்சேரியில் உள்ள தங்களது குருகுலத்தில் 30 மாணவிகள் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன் நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு, நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர், ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | |
|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. 1,000/- |
| • மதிய உணவு | ரூ. 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. 2,00,000/- |

**நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு**

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில் / வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை ஸ்ரீ சாரதா சக்தி பீடம் ("SHIRI SARADHA SAKTHI PEETAM") என்ற பெயருக்கு Cheque / DD / MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம். மேலும் எங்களிடமிருந்து ரசீதைப் பெற்றுக் கொள்வது அவசியம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர் நல்லாசியுடன்
நிர்வாகம்.

# தீபு - கோபு

























கருத்து : கார்த்தி படம் : கதிர்



உள் அடுக்குகளுக்குள்
பயணிப்பதான நாள் விரயத்தில்
வறுமைக்கோட்டின்
அடித்தளத்திலேயே
இறந்து கிடப்பவனைச் சுற்றிலும்
எழுத்தால் நிரப்பப்பட்ட காகிதங்களும்
நிரப்பப்படாத வாழ்க்கையும்

இருள் குடிக்கும்
பகல் பொழுதில்
சாளரம் ஒட்டிய
ஒற்றைக் கொன்றையில்
வாழ்தலின்
கடைசி நிமிடங்களை உணராமலே
நிகழ்வின் இனிமைக்காகவும்
என் கல்வானின்
குறிதப்பா உயிர்ப் பசிக்காகவும்
கானமிசைக்கிறது காக்கைக்குப் பிறந்த
கருங்குயிலொன்று

என் உறக்கத்தின் தலை மிதித்து
நடந்து போகும் காலத்தின் கைகளில்
நிரம்பியிருக்கிறது
வீணடிக்கப்பட்ட கடந்த காலம்...

கனவுகளின் குருதி சொட்டச் சொட்ட
வாழ்தலுக்கான இறைஞ்சுதலுடன்
நாட்களின் வீதியில்
எதிர்காலம் தேய்கிறது.

துக்கங்களின் சந்ததி பெருக்கத்தில்
ஏமாற்றங்களும் எதிரிகளும்
கைகோத்து
விஸ்வரூபமெடுத்து ஆலோசிக்கின்றன..
என் பிரியங்களைக் கொன்று குவிப்பது
குறித்து!

இருப்பதற்கான எல்லா வகையான
சாத்தியக் கூறுகளையும்
காகிதக் கப்பலாக்கி
நேற்றைய மழைநீரில் விட
சுவாரஸ்யத்துக்கு
வானவில்லும் இல்லை
சாரலும் இல்லை...
சூனியத்தைத் தவிர...!



# கவியோவியத்தமிழன் கவிதைகள்



ஊருக்கு நடுவில் மலர்ந்த ராட்சத தாமரை மலர், மலையாய் இறுகினால் எப்படியிருக்குமோ அப்படியிருக்கிறது திண்டுக்கல் மையத்திலிருக்கும் மலைக்கோட்டை: புராணக் காலத்திலிருந்து பிரிட்டிஷ் காலம் வரையிலான வரலாற்றுச் சுவடுகளை தன் மேனியெங்கும் சுமந்தபடி. தென்னகத்தின் கைலாயம் என்பது இதன் இன்னொரு பெயர். காரணம், கைலாயத்தில் ருத்ரனாக இருக்கும் சிவன் இங்கே பத்மகிரீஸ்வரர். கிட்டத்தட்ட இரண்டரை கிலோமீட்டர் சுற்றளவு கொண்ட பத்மகிரீஸ்வர மலையின் தொள்ளாயிர மாவது அடியில், அதாவது உச்சியில் கோயில் கொண்டிருந்த பத்மகிரீஸ்வரருக்கு, முறையான கோயில் உருவானது அச்சுதராய மன்னர் காலத்தில்தான். அதன் பிறகு மன்னர் களின் ஆசை நாயகிகள் அவ்வப்போது மாறுவது போல இக்கோட்டையும் பல மன்னர்களின் கைகளுக்கு மாறிமாறி வந்திருக்கிறது. திப்புசுல்தானின் தென்னகத்துக் கோட்டைகளில் இது மிக முக்கியமானது. கோயிலாக இருந்த


* 32 அடி கருடன்


* தெப்பம்

# திப்பு சுல்தான்



மலையை, முதன்முதலில் கோட்டைகட்டி பாதுகாப்பிடமாகப் பயன்படுத்தத் தொடங்கியது முத்துகிருஷ்ண

கோட்டைக்குள் நுழைந்துவிடுவார்கள் என்பதுதான் காரணமாம். அவ்வப்போது திண்டுக்கல் கோட்டைக்கு விஜயம்




* பீரங்கி மேடு

# கோட்டை!

மன்னர் காலத்தில்தான். திருமலை நாயக்கர் காலத்தில் இங்கே குற்றவாளிகளுக்கான சிறைச்சாலை ஒன்றும் நிறுவப்பட்டிருக்கிறது. திப்புசுல்தானின் தந்தை ஹைதர் அலி காலத்தில் மலையில் வீற்றிருந்த பத்மகிரீஸ்வரரும் அபிராமி அம்மனும் கோட்டையின் பாதுகாப்பு கருதி கீழே இறக்கப்பட்டு, இப்போதிருக்கும் காளகத்தீஸ்வரர் கோயிலில் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கின்றனர். எதிரி நாட்டு ஒற்றர்கள் பக்தர்கள் வேடத்தில்

செய்த ஹைதர் அலி மறக்காமல் செல்லும் இடம், இப்போது கோட்டையில் கிழக்குப்புறத்திலிருக்கும் ஆஞ்சநேயர் கோயில்தானாம். திப்புசுல்தான் ஆட்சிக்காலத்துக்குப் பிறகு கிட்டத்தட்ட 147 வருடங்கள் ஆங்கிலேயர்கள் கட்டுப்பாட்டில் இருந்திருக்கிறது கோட்டை. அவர்கள் சுதந்திரப் போராட்ட வீரர்களை அடைத்து வைக்கும் சிறைச்சாலையாக மாற்றியிருக்கின்றனர். "மலையில் நாம் முக்கியமாகப் பார்க்கவேண்டியது பத்மகிரீஸ்வரரும் அபிராமி அம்மனும்

இருந்துட்டுப்போன கருவறைகளைதான். வாங்க பார்க்கலாம்''- நமக்குச் சுவாரஸ்யம் தந்து அழைத்துப்போகிறார் கைடு கார்த்தி.

மலைக்கு ஏறிப்போக ராணி மங்கம்மா காலத்தில் செதுக்கப்பட்ட படிகளின் வழியாகப் போனால்தான் இலகுவாக இருக்கும். நுழைவாயிலைத் தாண்டிக் கோட்டைக்குள் பிரவேசித்ததும் நம் புத்திக்குள் குடைந்த கேள்வியொன்று. வீரர்களுக் குத் தாகம் எடுத்தால் தண்ணீருக்கு எங்கே போயிருப்பார்கள்; என்ன செய்திருப்பார்கள்? ஏனென்றால், தண்ணீர் இல்லாமல் போனதால் தாகம் நம்மைக் குடைந்து எடுத்துவிட்டது. கார்த்தியிடம் கேட்டோம். எங்கள்

**திப்பு சுல்தான் காலத்துக்குப் பிறகு கிட்டத்தட்ட ஒன்றரை நூற்றாண்டு இந்த கோட்டை ஆங்கிலேயர் வசம் இருந்தது.**

கேள்வியின் உள்ளர்த்தத்தைப் புரிந்துகொண்ட அவர், தன்னிடமிருந்த தண்ணீர் பாட்டிலைக் கொடுத்துத் தாகம் தணித்தார். ''ஸார் நம்ம முன்னோர்களுக்கு முன் யோசனை அதிகம். உங்களுக்குத் தோணின கேள்வி ஐந்நூறு வருஷத்துக்கு முன்னாடியே தோணுனதுனாலதான் மலையிலேயே ஐந்து தெப்பங்களைக் கட்டி வைத்திருக்கின்றனர்'' என்று நம்மைக் கேலியால் குத்தினார். ''தெப்பங்கள் சுத்தமா இருந்ததுக்குக் காரணம், குடிதண்ணீராகப் பயன்பட்டது மட்டுமில்லை; இங்கிருந்துதான் பத்மகிரீஸ்வரருக்கு அபிஷேகத்துக்குத் தண்ணீர் எடுத்திருக்கின்றனர்'' என்று கூடுதல் தகவலையும் அள்ளிப்போட்டார். நுழைவாயிலின் இருபுறத்திலும் போர்த் தடவாளங்களைச் சேமித்து வைப்பதற்கான கிடங்குகள் இன்றும் பழைமைமாறாத வாசனையோடு(?) இருக்கின்றன. அவற்றைத் தாண்டிச் செல்லும்போது கிழக்குப்புறமாக நம் கவனத்தை ஈர்க்கிறது பீரங்கிமேடு. ஆங்கிலேயர் காலத்தைச் சார்ந்த மூன்று பீரங்கிக் குழாய்கள்



சீனிவாசப் பெருமாள் கோயில்

காணப்படுகின்றன; அதே வலுவோடும் நிறத்தோடும்! இங்கிருந்து மேல்நோக்கிப் பார்க்கும்போது பத்மகிரீஸ்வரர் கருவறை விமானம் நம் ஆவலை அதிசயப்படுத்துகிறது.

தெப்பங்களின் வழியாக நம்மை நடத்திப்போகிறார் கைடு கார்த்தி. இது பத்மாலய மலைதான் என்று நமக்குச் சொல்லாமல் சொல்கின்றன தெப்பத்தில் மலர்ந்திருந்த தாமரை மலர்கள். இப்போது பாதை சற்றே செங்குத்தாக ஏறுகிறது. ''எப்போதும் மலையில்

செங்குத்தாக ஏறாமல் பக்கவாட்டில்தான் ஏறணும். இல்லைன்னா சறுக்கி விட்டுடும்'' கூறிவிட்டு, அப்படியே அழைத்துப்போகிறார் கார்த்தி.

உச்சிக்குப் போனதும் மலையில் கறுப்பாக இருந்த இடத்தைச் சுட்டிக்காட்டி, ''என்ன இது?'' என்று கேட்டோம். ''ஸார் பெரிய கார்த்திகைக்கு இங்க ஜோதி வழிபாடு நடக்கும். அதுக்கான அடையாள வடுதான் இது'' என்றவாறு கருவறை நோக்கி நம்மை அழைத்துப் போகிறார். உள்ளே அபிராமி அம்மனும் பத்மகிரீஸ்வரரும்


* அபிராமி அம்மன் சன்னிதி

இருந்துபோனதன் அடையாளமாக இருக்கின்றன அவர்களின் சன்னிதிகள். அம்மன் சன்னிதியில் சூடம் ஏற்றி மனசுக்குள் தொழுகிறார் கார்த்தி. கோயில் ஏறக்குறைய நூறுகால் மண்டபம்தான். கோயிலை விட்டு வெளிச்சுற்றுக்கு வந்ததும், ''ஸார்... இந்த மலை மேல இருக்கற பத்மகிரீஸ்வரர் மட்டும் ஆச்சர்யமில்லை. மலையைச் சுற்றிலும் சில ஆச்சர்யங்கள் இருக்கின்றன'' சிலவற்றை அள்ளிப்போட்டார்.

''அதோ கோட்டையோட மேற்குப் பக்கம் தெரியுது பாருங்க ஒரு கோபுரம். அது அகத்திய விநாயகர் கோயில். பொதிகைக்கு வந்த அகத்தியர் இங்கு பிள்ளையாரை வழிபட, அகத்திய விநாயகர் கோயில்னு பேர் வந்துச்சாம். இங்க ராகு கேது நாக ஸர்ப்பம் பூஜையும் சப்தகன்னி பூஜையும் வெகுபிரசித்தம். வடமேற்குப் பக்கமா ரமண மகரிஷியோட தியான குகை இருக்கு. தென்புறம் பேகம்பூர் பள்ளிவாசல். வடக்கே தனி சனீஸ்வரர் கோயில். இங்கே அபய முத்திரையோடு அருள்பாலிக்கிறார்.


* கோட்டை மாரியம்மன்

வடகிழக்கிலுள்ள சீனிவாசப் பெருமாள் கோயிலில் திருப்பதியில் உள்ளதுபோல 32 அடி உயர கருட பகவான். கிழக்கில் வீரர்களின் காவல் தெய்வமாக விளங்கிய மாரியம்மன். இன்று திண்டுக்கல்லின் சமயபுரம் என்று சொல்லும் அளவுக்கு வெகுபிரசித்தம்.'' பேசிக்கொண்டே நம்மை அடிவாரத்துக்குக் கூட்டிவந்த கார்த்தி, ராமலிங்க அடிகளாரின் ஆஸ்ரமத்தில் கண்களை மூடி தியானத்தில் ஆசுவாசப்படுகிறார்.

*சென்ற வாரத் தொடர்ச்சி...*

**க**விஞர் சுப.ஆறுமுகத்தைச் சந்திக்க திருவொற்றியூர் போயிருந்தோம். பழைய பேப்பர் வாங்கும் விற்கும் கடை. கிழிந்த புத்தகங்களும், பேப்பர் கட்டுகளும் சிதறியும் அடுக்கியும் வைக்கப்பட்டிருக்கும் சின்னக் கடை. அடிக்கடி இந்தக் கடைக்கு வந்துவிடுவோம். அவரும் எங்கள் குழுவைச் சேர்ந்த முக்கியமானவர். ஆளுக்கொரு பேப்பர் கட்டுகளைத் தூக்கிப் போட்டு உட்கார்ந்து பேசிக்கொண்டிருப் போம்.

''நாம் உபயோகித்துக் கழித்த சொற்கள் கையேந்தி எல்லோரையும் ஒரு பார்வை பார்த்து நின்றார். சுப.ஆறுமுகம் ஏற்கெனவே பழைய ரவுடி போல இருப்பான். 'முன்னாள் ரவுடி'ன்னே அவனைக் கிண்டலா நாங்க கூப்பிடுவோம். அதற்கேற்றாற்போல அந்தப் பிச்சைக்காரரை, ''யோவ், போய்யா சில்லறை இல்ல...'' என்றான். அவர் தயங்கியபடி போகாமல் நின்றார். சுப.ஆறுமுகம், ''யோவ்... போய்யா சில்லறை இல்லைன்னு சொல்றேன் இல்ல...'' எனக் கோபமாகக் கத்தினான். அதுவரை அமைதியா இருந்த இவன், ''டேய்... சும்மா இருடா...'' எனச் சத்தமாகக் கூறியபடி எழுந்து போய் தன்

# கடவுள்கள் நண்பர்கள் வைத்திருக்கவில்லை!

இங்கே அனாதையாகி விட்டன. அச்சடித்த காகிதங்களில் கேட்பாரற்றுப் போன வாக்கியங்கள்... இதை வாங்கிப் போகிறவன் அறிவானா... தான் அனாதைகளை வாங்கிச் செல்கிறவன் என்று.'' யாரு.. அவன்தான். இதை எழுதிச் சுவரில் ஒரு ஓரமா ஒட்டிட்டான்.

அன்னைக்குக் கடையில் உட்கார்ந்து பேசிக்கிட்டிருந்தப்போ பிச்சைக்காரர் ஒருவர் கடையருகே வந்து, 'சார்' எனக் பாக்கெட்டுகளில் தேடிக் கண்டெடுத்து, பத்து ரூபாயை அந்தப் பிச்சைக்காரருக்குத் தந்தான்.

எல்லோரும் மௌனத்தால் அவனை முறைக்க, அவன் சுப.ஆறுமுகத்தைப் பார்த்து, ''ஹேய்... பிச்சைக்காரனுக்குக் காசு போட விருப்பமில்லைன்னா... போயிட்டு வாங்கன்னு சொல்லு, போய்யான்னு கூட சொல்லு... அவன் போயிடுவான். அதை வுட்டுட்டு சில்லறை இல்லைன்னு சொல்



றியே... எந்த அர்த்தத்துல சொல்றே.. எல்லாம் ரூபாய் நோட்டா இருக்குது. அத உனக்குப் போட முடியாது. அல்லது உனக்குச் சில்லறை போடக் கூட பைசா இல்லாம இருக்கேன்ற அர்த்தத்துல சொல்றியா.. பிச்சைக் காரனோட அளவு சில்லறை. கடவுளோட அளவு நோட்டுன்னு நீயும் நம்பறியா? சொல்லு'' என விவாதத்துக்குக் கூப்பிடும் தொனியில் கூட.ஆறு முகத்தைப் பார்க்க, அவன் இவனைச் சூடாகப் பார்க்க ஆரம்பித்தான்.

ரெண்டு பேருக்கும் பலமுறை இவ்வாறு வேறு விஷயங்களில் முட்டிக்கொண்டு பழைய

**புதுசா ஒருத்தனைப் பார்த்து காசு குடுன்னு கேக்கறது எவ்ளோ கஷ்டம்னு தெரிஞ்சுக்க ஆர்வமா இருந்துச்சு.**

பேப்பர் கடை பத்திக்கிற அளவுக்கு அனல் பறந்திருக்கு. எனக்கு அதிலெல்லாம் அதிகம் கவனம் போகவில்லை, பார்த்திபன் ராஜா ஸார் சொன்ன விஷயம் வலியோடு நினைவிலாடியது. அந்த நேரம் பார்த்து மஞ்சரியும் அங்கு வந்து சேர்ந்தான். இரண்டு பேரும் பேசுவதில்லை என்பது ஊர்ஜிதமான செய்தி.

எதிர்பாராதவிதமாக சுப.ஆறுமுகம், "சரி அதெல்லாம் வுடு. இனிமேல் சில்லறை இல்லைன்னு சொல்ல மாட்டேன். நீ பிச்சைக்காரனுக்குக் காசு போட்டு அவன் சோம்பேறித்தனத்தை என்கரேஜ் பண்றது நல்லதா... புராதனக் கேள்விதான். நீ பண்றேங்கறப்போ இது புது கேள்வியா மாறிடுது. மொதல்ல அந்த மேட்டருக்கு வா. ஒனக்கு இன்னா பிச்சைக்காரர்கள் மேல கரிசனம். எட்டாவது உலகம் எழுதறியா என்ன?" என்று மெல்ல ஊதினான்.



## ரு இன் ஒன்!

**கதலி நரசிங்கப் பெருமாள் கோயிலின் கருவறையில் சிவன் லிங்க வடிவிலும், பெருமாள் தன் தேவியர் சமேதரராகவும் காட்சி தருகின்றனர். உலகில் வேறெங்கும் ஒரே கருவறையில் சிவனும், பெருமாளும் அருள் பாலிப்பதில்லை.**

**- சிம்மவாஹினி**

அவன் நன்றாகப் பின்புறம் சாய்ந்து உட்கார்ந்து கொண்டு சுப.ஆறுமுகத்தையே சற்று நேரம் பார்த்தான். மெல்ல பாக்கெட்டில் கை விட்டுப் பீடியை எடுத்தான். வாயில் வைத்துக் கொண்டான். பற்ற வைக்கவில்லை. அதன் முனையைக் கடித்து துண்டிக்காமல் மென்றபடி, எதிரிலிருந்த காலண்டரைக் கூர்ந்து பார்த்தான். அதில் போன மாதத் தேதி ஒன்று இருந்தது. எழுந்துபோய் அதைச் சரியாகக் கிழித்தான். 26 நாட்கள் கிழிக்கப்படாமல் இருந்த காலண்டர் புதியதாக அன்றைய தேதியைக் காட்டியது. வந்து அமர்ந்தவன் சுப.ஆறுமுகத்தைப் பார்த்து, "டீ சொல்லு" என்றான். அவனும் டீ சொல்ல எதிர்க் கடைக்குப் போனான். மஞ்சரி குப்பையிலுள்ள ஏதோ ஒரு ஆங்கிலப் புத்தகத்தை எடுத்துக் கூர்ந்து படிக்கத் தொடங்கினான்.

சுப.ஆறுமுகம் திரும்ப வந்தான். அவன் உள்ளே வந்ததும் இவன், "சுப.ஆறுமுகம் நீ பிச்சை எடுத்திருக்கியா...?" எனக் கேட்டான். சட்டென தலை மேல் பேப்பர் கட்டு விழுந்துவிட்டதைப் போலத் தடுமாறி, சுதாரித்த சுப.ஆ. எதையோ உணர்ந்தவன் போல, "இல்ல" என்றான். நான் எச்சரிக்கையானேன். உள்ளூர ஒரு பதற்றம் எனக்குத் தொற்றியது. டீ வந்தது. "டேய், டீ சாப்பிடு" என்றேன் அவனிடம். வாங்கி அருகில் வைத்துக்கொண்டான்.

அமைதியான தருணத்தை உடைத்தபடி சட்டென, "நான் எடுத்திருக்கேன்... பிச்சை... இப்பவும் எடுத்துக்கிட்டுத்தான் இருக்கேன். தெரியுமா உங்களுக்கு?" என்றான். எல்லோரும் அவனைக் கவனிக்க ஆரம்பித்தார்கள். மஞ்சரி புத்தகத்தை வாசிப்பது போல கையில் வைத்துக்கொண்டு தூரத்துத் தரையைப் பார்த்துக்கொண்டிருந்தான். "இவ்வளோ நாளா உங்ககிட்ட சொல்லாம இருந்ததுக்கு ஸாரி. இது உண்மை. என் செலவை சுடுகட்டறதுக்கு நான் பிச்சையும் எடுக்கறேன்..." எனக் கூறியபடி சற்று குனிந்து உட்கார்ந்துகொண்டான். அதிர்ச்சியிலிருந்து மீளாத சுப.ஆறுமுகம்... "டேய் என்னடா சொல்றே... ஜூசாடா நீ?" என்றான். என்னைப் பார்த்து, "ஹேய் என்னடா சொல்றான் இவன்...?" என்றான். நான் அவனையே பார்த்துக் கொண்டிருந்தேன். அவனோ... "யெஸ், பிச்சை என்கிற, பொருள் கிடைக்கிற வடிவத்தை நான் கைல எடுத்து யூஸ் பண்றேன்... தட்ஸ்

ஆல்'' என நிறுத்தி... ''பிச்சை எடுக்கறது ரொம்பக் கஷ்டம்டா... அதுக்கும் கடுமையான உழைப்பு, மனோபாவம் வேணும்... அது கலாசார பூவிதழ்களைக் கல்லாக்கி விடுகிற மனோநிலை... ரொம்பக் கஷ்டம். சாதாரணமா ஒருத்தர்கிட்ட டீ சொல்லுன்னு சொல்றதுக்கு எவ்வளவு உறவு தேவைப்படுது தெரியுமில்ல...

புதுசா ஒருத்தனைப் பார்த்து காசு குடுன்னு கேக்கறது எவ்ளோ கஷ்டம்னு தெரிஞ்சுக்க ஆர்வமா இருந்துச்சு. நம்மால அது முடியுமான்னு யோசிக்கும்போது, முடியாதேன்னு தோணிச்சு. சாதாரணமா, நீங்களே என்னை 'சாப்பிடறியா?'ன்னு கேட்டுட்டா, எவ்வளவு பசி இருந்தாலும் வேண்டாம்னு சொல்லிட்டுப் போயிடுற ஆளு நானு. நான் மட்டும் இல்ல. பல பேரும் அப்படித்தான்... 'சாப்பிடறியா?'ன்னு கேக்கறதுல உள்ள கேள்வித்துவம், கேக்கப்படுறவனோட, பசியை, வெட்கத்தை, வலியை உணராததுன்னு நெனைக்கிறவன் நான். 'வா சாப்பிடு... சாப்பிடலாம் வா'ங்கறது வேற...'' என்று சற்று இடைவெளிவிட்டு, ''இதுல நான் போய் எப்படிப் பிச்சை எடுக்கறது... முடியாதுங்கறப்போ அது ஒரு சவாலா மாறிடுச்சு எனக்குள்ள. சரி எடுத்துப் பார்ப்போம்னு கெளம்பிட்டேன். இன்னொண்ணு தெரியுமா உங்களுக்கு.. அதுல மிக ஆத்திரமாக உள்ளடங்கி உள்ள நடிப்புத்திறன்... அது இணையாம பிச்சை எடுப்பது சாத்தியமே இல்ல. நம்மையறியாம பிச்சை எடுக்கும்போது வெளிப்படுத்துற நடிப்புத் திறமை அபாரமானதுன்னு என்னோட கணிப்பு... கவனிங்களேன்...'' என்றவன், சட்டென எழுந்து பல்வேறு பிச்சைக்காரர்களின் பிச்சை எடுக்கும் முறையை நடித்துக் காட்டினான்.

டிரெயினில், பஸ் ஸ்டாண்டில், வீடுகளில், தெருவில், கடைகளில் சிறியவர் பெரியவர் வரையென அவன் செய்து காட்டிய பிச்சை நடிப்புகள், பிச்சை எடுக்கும் போது நம் சுயத்தைச் சற்றேனும் ஒளித்துக் கொள்வதற்கான தேவை கருதி வரும் பிச்சை எடுப்பதற்கான நடிப்பின் வினையாற்றல்கள் என் மனதை எங்கோ இழுத்துச் சென்றன. நடித்துக் காட்டி முடித்துவிட்டு உட்கார்ந்து, ஆறிய டீயைத் தண்ணீர் போலக் குடித்தவன், தான் பிச்சை எடுக்கும் இடம், விதம் போன்றவற்றைக் கூறினான். ''தயவுசெய்து நம்ம ஆறு பேருக்கு மட்டும் தான் இந்தச் செய்தி...'' என்றான். மஞ்சரி மெல்ல கண்களைத் துடைப்பதைக் கவனித்தேன்.

**திருப்பதி போகும் பழநி!**

பழநியில் உள்ள புஷ்ப கைங்கர்ய சபாவிலிருந்து பூக்கள் திருப்பதிக்கும், பழநிக்கும் அர்ச்சனைக்காகப் போகின்றன. மேலும், ஊட்டி மலர்க் கண்காட்சியைப் போல கொடைக்கானலில் நடக்கும் மலர்க் கண்காட்சியிலும் பழநியில் பூக்கின்ற மலர்களின் அணிவகுப்பு வெகு பிரசித்தம்.

- ராஜா,
அய்யம்பாளையம்.



''பிச்சை எடுக்கறதை டெய்லி ஒரு தொழிலா செய்யலை. எப்பவாவது வசூலாகிற காசுல தான் இப்ப சுயமா புத்தகங்கள் வாங்குறேன். பத்திரிகைகளுக்கு சந்தா கட்டி படைப்புகள் அனுப்புறேன். வேற ஆட்களுக்கு நான்தான் 'டீ' வாங்கித் தர்றேன்... ஒங்க கத வேற...'' என்று சற்று நிறுத்தி தண்ணீர் வாங்கிக் குடித்தான். ''ஏதோ வித்தியாசமா பண்றதா நெனச்சு... அவ

மானத்தைத் தேடிட்டு அலையறது புரியு தாடா..?'' என்றான் மெல்ல சுப.ஆ. அவ னைப் பார்த்துச் சிரித்தபடி, ''ஒரு பக்கு வம் வந்த பிறகு நான் கைவிட்ட முக்கிய மான அஞ்சு விஷயங்கள்...'' என்று நிறுத்தி னான். பின்பு தலையைக் கோதியபடி, ''ஈனம், மானம், சூடு, சொரணை, ரோஷம்...'' என்று உரக்கச் சிரித்தான். ''தேவைகளின் தன்மை கருதி நாம் பயன் படுத்திக்கிற சில பொது புத்தி விஷயங்கள், தேவையின்மைகளின் தன்மை உணரப் படாமல், நம் வாழ்க்கையின் கட்டமைப் புக் கருவிகளாகச் செயல்படுவதை நாம் புரிஞ்சுக்க முயற்சி பண்றதில்ல... நான் குறிப்பிட்ட அஞ்சு விஷயங்கள் பல வேளைகளில் வெற்றியை நோக்கிய நீடித்த போராட்டத்துக்குத் தடையா அமைஞ் சுடுது- தற்கொலைக்கு, கொலைக்கு வெளிப்படையான உள்காரணிகளா இதெல்லாம் இருக்குதுன்னு எனக்குப் புரிஞ்சுது. விட்டு விலகிட்டேன். நான் மகிழ்ச்சியா போராடுறேன். எல்லா வகை யிலும்... ஓ.கே... இதத்தான் ஞானம் பெற் றார்னு சொல்றாங்களோ?''ன்னு பயங் கரமா சிரிக்க ஆரம்பித்தான்.

நாங்க எப்படி சிரிப்போம்? இதுல ஜோக்கு என்னன்னா... மறு நாள் மஞ்சரி எனக்கு ஃபோன் பண்ணி, ''சிறந்த கலைஞர்கள் எல்லாம் பித்துப் பிடிச்சவங்க மாதிரி நடந்துக்குவாங் களாமே... பித்து கலந்தால்தான் நல்ல கலை வரும்னு சொல் றாங்களே. நல்லா கவிதை, கதை எழுதணும்னா பயித் தியமா ஆயிடணுமா...?'' என்று சீரியஸா கேட்டா. என் னத்தைச் சொல்றது?

''நீ கொழப்பிக்காதே மஞ்சரி. நாம ஃப்ரண்ட்ஸ்... அவ்ளோதான்.''

அவனோ, ''அப்படி மெண்டலா ஆயித்தான் பெரிய இலக்கியவாதின்னு பேரு வாங்கணும்னா, இலக் கியமே வேண்டாம்டா சாமி...'' என்றான்.

''இலக்கியத்துக்கும் இதுக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை. அவன் பைத்திய மும் இல்ல... டேக் இட் ஈஸி..'' என்று சுருக்கமாகச் சொன்னேன்.

ஹேய்... இந்த செல்ஃபோன் வேற... ஏதாவது சீரியஸா பேசிக்கிட்டிருக்கும் போது கொஞ்சம் இருங்க... ''ஆங்... சொல்றா மாமு... சௌக்யமா இருக்கேன். அப்புறம்... கதையா... குடுத்துர்றேன்... சீக் கிரம் தரணுமா? தந்திடறேன்டா... ஓ.கே.டா மாமு... வேற விசேஷ செய்திகள் உண்டா? ஓ.கே.டா... ஓ.கே...!''

அவனைப் பத்தி எழுதலாமோ! ●

**மிக சூத்திரமாக உள்ளடங்கி உள்ள நடிப்புத் திறன் இணையாம பிச்சை எடுப்பது சாத்தியமே இல்லை!**

அருள்வாக்கு

# பண்புக்கு அளவுகோல்!

ஒரு தேசத்தின் பண்புக்கு அளவுகோல் எது? ஒரு நாடு என்று இருந்தால், அதில் எல்லோரும் பண்பாளர்களாக (culture) இருக்க முடியாது. திருடன், பொய்யன், மோசக்காரன் எல்லோரும் இருக்கத் தான் செய்வார்கள். இப்படிப்பட்டவர்கள் இருந்தாலும், 'இந்தத் தேசத்தில் பண்பு இருக்கிறது. கெடுதலானவர்கள் இருந்தாலும்கூட இந்த நாடு பிழைத்துப் போகும்' என்று தெரிந்து கொள்வதற்கு என்ன செய்ய வேண்டும்? ஒரு நோயாளிக்குப் பல கோளாறுகள் இருந்தாலும் டாக்டர் இருதயத்தைச் சோதனை செய்து பார்த்துவிட்டு, 'இருதயம் நன்றாக இருக்கிறது; ஆகவே பயமில்லை' என்கிறார் அல்லவா! அதுபோல் ஒரு தேசத்தில் கோளாறுகள் இருந்தாலும், அதன் பண்பாட்டை உரைத்துப் பார்க்க ஓர் இருதய ஸ்தானம் இருக்கிறதா?

இருக்கிறது. ஒரு தேசத்தின் பண்பு உயர்ந்திருக்கிறது; மனோபாவங்கள் உயர்ந்திருக்கின்றன; அங்கங்கே அழுக்குகள் இருந்தாலும் மொத்தத்தில் அது சுத்தமாக இருக்கிறது என்பதை உரைத்துப் பார்ப்பதற்கு அந்தத் தேசத்து மகா கவிகளின் (இலக்கிய கர்த்தர்களின்) வாக்கே ஆதாரமாகும். ஒரு தேசத்தின் பண்புக்கு இதயமாக அல்லது உரைகல்லாக இருப்பது, அந்த நாட்டு மகாகவியின் வாக்குத்தான்.

இலக்கிய கர்த்தர்களில் உயர்ந்தவர்கள், மட்டமானவர்கள் எல்லோரும் இருப்பார்கள். இவர்களில் அசுத்தமே இல்லாதவனின் வார்த்தைதான், அழுக்கின் கனம் இல்லாததால் காலப் பிரவாகத்தில் அமுங்காமல், என்றென்றும் மேலேயே விளங்கிக் கொண்டிருக்கும். அப்படிப்பட்டவனின் வாக்கே நமக்குக் கலாசார விஷயங்களில் பிரமாணமாகும்.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

# கடம்பா காப்பாத்து...

பழநினா என்னென்ன ஸ்பெஷல்? மணக்கும் விபூதி. இனிக்கும் பஞ்சாமிர்தம். குறைந்து விடாத குதிரை வண்டிகள். இவற்றோடு வீதிகளில் ஆங்காங்கே சிறு சிறு குன்றெனக் குவிந்திடும் குப்பைகளையும் அவசியம் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

தண்ணீர் பாக்கெட்டுகள், கேரி பேக்குகள் என எல்லாம் 'காலி'யான பிளாஸ்டிக் பொருட்களின் குப்பைகள், காகித அட்டைகள் என கலந்துகட்டி கண் மூடிக் கண் திறக்கும் முன்னர் குப்பைகள் குவிந்து விடுகின்றன.



* த.கார்த்திகேயன்



* கே.எம்.ரெத்தினம்

சாரை சாரையாகப் பெருகி வரும் பக்தர்களின் கூட்டம், உபயோகித்து விட்டெறியும் பொருட்கள் அனைத்துமே வீதி மையம், சாலையோரம் என சேர்ந்து போகின்றன குப்பைகளாக. அதிலும் நெருக்கடி மிகுந்த தெருக்களில் நடைபாதை வணிகர்கள், நகர்ந்து ஊர்ந்து செல்லும் விற்பனையோர் என அனைவருமே ஏதேனும் ஒரு குப்பை மேட்டருகே இருந்து கொண்டுதான் வியாபாரம் செய்கின்றனர். காண்பதற்கு விந்தையிலும் விந்தை!

''பழநி திருக்கோயில் தேவஸ்தானம் சார்பா மருத்துவமனை இருக்கு. அங்க சரியா மருத்துவர்கள் இருக்கறது இல்லே. நகராட்சியில சுகாதாரப் பிரிவு ஒண்ணு இருக்கு. ஆனா, அதுக்குன்னு இன்ஸ்பெக்டர் கிடையாது. சன்னிதி ரோடு விநாயகர் கோயில் எதிரே சீஸன் சமயத்துல ஒரு மணி நேரத்துல நாலு டிராக்டர் குப்பை சேருது. கம்ப்ளீட்டா கிளீன் பண்ணி எடுத்துட்டுப் போக நகராட்சியில போதிய துப்புரவுப் பணியாளர்கள் இல்ல. நகராட்சிதான் அப்படின்னா தேவஸ்தானமாவது குப்பைகளை அப்புறப்படுத்த முயற்சிகள் எடுக்கணும். குவியும் குப்பைகளை தேவஸ்தானம் கண்டுக்கறது இல்ல!'' என்கிறார் பழநி அடிவார வர்த்தகச் சங்கச் செயலாளர் கே.எம்.ரெத்தினம்.

''சபரி மலைக்கு பக்தர்கள் மாலை போடத் தொடங்கும்போதே, பழநி மலைக்கும் சீஸன் ஆரம்பிச்சுடும். ஐயப்ப பக்தர்கள் பழநி மலைக்கும் தவறாம வந்துட்டுப் போறாங்க. இதுல தமிழ்நாடு, கேரளா, ஆந்திரா ஐயப்ப பக்தர்கள்னு அனைவரும் அடக்கம்'' எனத் தொடங்குகிறார் பழநி நகராட்சியின் 27வது வார்டு சுயேச்சை உறுப்பினர் த.கார்த்திகேயன். கார்த்திகை மாசம் துவங்கற சீஸன், மார்கழி, தைப் பொங்கல் அப்புறம் தைப்பூசம் வரைக்கும் தொடரும்.

மொத்தத்துல நூறு நாள்னு வெச்சுக்கங்க. அந்த நூறு நாட்கள்லயும் தினசரி சராசரி அஞ்சு லட்சத்துலேர்ந்து பத்து லட்சம் பக்தர்கள், பழநிக்கு வந்துட்டுப் போறாங்க. இவ்வளவு சனங்க தினசரி வந்துட்டுப் போற ஒரு ஊர்ல, குப்பைகள் குவியுமா இல்லையா? அப்ப அதுக்கு என்ன செய்யணும்? நகராட்சி மொதல்ல களத்துல எறங்கணும். தமிழ்நாட்லயே மிக



# சுத்தமாகுமா பழநி?







அதிகமான வசூலை அள்ளிக் கொட்டிக் கற தேவஸ்தானமாவது இதுல கவனம் செலுத்தணும். ரெண்டு நிர்வாகமும் கண்டுக்கறது கிடையாது. இதாங்க பிரச்னை.

பழநி நகராட்சியை சுகாதார அடிப்படையில ஆறு டிவிஷனா பிரிச்சிருக்காங்க. இதுல அடிவாரம் மற்றும் நெருக்கடிப் பகுதிகள் ஒரு டிவிஷன். ஆறு வார்டு, கிரிவலப் பாதையை மட்டும் தேவஸ்தானம் பராமரிக்குது. அங்கேயும் ரொம்ப மோசம். போதிய கழிப்பிட வசதி கிடையாது. சுகாதாரத்துக்கு நோ கியாரண்டி!

கிரிவலப் பாதை தவிர்த்து அருள் ஜோதி வீதி, அய்யம்புலி வீதி, சன்னிதி வீதி, ஆண்டவன் பூங்கா சாலை ஆகியன நகராட்சி சுகாதார பிரிவு கட்டுப்பாட்டுல இருக்கு. இங்கே குவிகிற குப்பைகளை அள்ளிக்கொண்டு போய் அப்புறப்படுத்த நகராட்சியில் போதுமான துப்புரவுப் பணியாளர்கள் இல்லை. பழநி நகராட்சிக்கு வருவாய் கம்மி. கோயிலுக்கு வருமானம் மிக மிக அதிகம். அப்படி இருக்கும்போது, தேவஸ்தானமே இந்த விஷயத்துல அக்கறை கொண்டு பணியாளர்களை நியமித்து, மூணு ஷிப்ட் அடிப்படையில் இருபத்து நாலு மணி நேர துப்புரவுப் பணி மேற்கொள்ள வேண்டும். குப்பையில்லா பழநி அப்போ உறுதி!'' எனக் கோரிக்கை வைக்கிறார் கார்த்திகேயன். ○

கலக்க வருதுப்பா

# கல்கி

ரீடர்ஸ் கெட் ரெடி

திருநெல்வேலி மாவட்ட வாசகர்களே...
படைப்பாளிகளே... சமூகநல ஆர்வலர்களே...

## உங்களைத் தேடி வருகிறது கல்கி டீம்...

- உங்க ஊரைப்பத்தி அல்வா மாதிரி இனிக்கிற வரலாறு இருக்குமே...
- கட்டபொம்மன் மாதிரி கம்பீரமான மாமனிதர்கள் யார்யார் பிறந்திருக்கிறார்கள்?
- தாமிரபரணி ஆற்றைப் போல ஈரமான டூரிஸ்ட் ஸ்பாட் எது?
- குற்றாலச் சாரலைப் போல குளுகுளு செய்திகள் கொடுங்க...
- அரிவாள் மாதிரி பயமுறுத்தும் பிரச்னைகள் என்னென்ன?
- பாளையங்கோட்டை ஜெயில் மாதிரி பாரம்பரியச் செய்திகள் இருக்குமே...
- நவ திருப்பதி மாதிரி ஆன்மிகத் தலங்களை எழுதலாமே...
- டி.கே.சி. வட்டத்தொட்டி மாதிரி என்னென்ன இலக்கிய நிகழ்வுகள் நடக்குது?

வாசகர்களே...

எழுதி அனுப்புங்க... உங்கள் தகவல்கள்... இதழ்களுக்கு ஆதாரம்!

விவரங்கள் எதிர்ப்பக்கத்துல இருக்கே!



ஆமாம்! உங்கள் திருநெல்வேலி மாவட்டத்துக்கு 'கல்கி' டீம், நேரில் வந்து உங்கள் பிரச்னை / யோசனையை ஆராய்ந்து, உங்கள் வாய்ஸுக்கு 'கல்கி' இதழ் மூலம் மைக் கொடுக்கும்!

சில சிம்பிள் கண்டிஷன்ஸ்...

- கீழே உள்ள கூப்பனைக் கத்தரித்து ஒட்டி அனுப்பப்படும் கடிதம், படைப்பு மட்டுமே, பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படும்...
- ஒரு கடிதத்தில் 5 செய்திகள் / படைப்புகள் மட்டுமே இருக்கலாம்.
- ஒருவரே எத்தனை கடிதம், படைப்புகள் வேண்டுமானாலும் அனுப்பலாம் (தனித்தனி கூப்பனுடன்). ஏராளமாகும் கடிதங்கள், யோசனைகள், படைப்புகளுக்குச் சன்மானங்கள் உண்டு.
- வாசகர்கள் தேர்வு செய்யும் மிகச் சிறந்த கடிதம் அல்லது யோசனை அல்லது படைப்புகளுக்குச் சிறப்புப் பரிசும் உண்டு...
- திருநெல்வேலி மாவட்டத்தின்.... பிரச்னைகளுக்கு - ☑ பெட்டிஷன் பாக்ஸ்

ஆன்மிக, வியாபார, சுற்றுலா தலங்களின் சிறப்புக்கு - ☑ நியூஸ் ஏந்தி பவன்

சிறுகதைகள், கவிதைகளுக்கு - ☑ வேடந்தாங்கல்

நகைச்சுவைக்கு - ☑ ஜோக் ஃபால்ஸ் என்றவாறு கூப்பனில் ☑ செய்து கவரின் மேல் ஒட்டி, உங்களின் முழு முகவரி, தொலைபேசி தொடர்பு எண் ஆகியவற்றைக் கட்டாயம் எழுதி அனுப்பவும்.

# வர்றோம்!

கடிதங்கள் வந்து சேரவேண்டிய கடைசி தேதி : 15.02.2010

**கலக்க வருதுப்பா கல்கி**
**திருநெல்வேலி மாவட்டம்**

☐ நியூஸ் ஏந்தி பவன் ☐ பெட்டிஷன் பாக்ஸ்
☐ வேடந்தாங்கல் ☐ ஜோக் ஃபால்ஸ்

47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32



# நீங்க ச்சும்மா கோடு போடுங்க...
# நாங்க உடனே ரோடு போடறோம்!

சித்தரேவு கிராம மைதானம். சமத்துவப் பொங்கல் விழாவினால் களை கட்டி யிருந்தது. ஒருபுறம் பெண்கள் விறகு அடுப்பு மூட்டிப் பொங்கலிட, மறுபுறமோ சிறுவர்களும் சிறுமிகளும் விளையாட்டுப் போட்டிகளில் திளைத்திருந்தனர். அவர்களை ஒன்றிணைத்து இயக்கியது சக்தி அறக்கட்டளை. இது திண்டுக்கல் மாவட்டம் அய்யம்பாளையம் கிராமத்தைத் தலைமையகமாகக் கொண்டு செயல்பட்டு வருகிறது.

பொங்கலிட வந்திருந்த பெண்களில் சிலரைச் சந்தித்தோம். "நாங்க சக்தி இளஞ் சூரியன் மகளிர் சுய உதவிக்குழு ஆரம்பிச்சு அஞ்சு வருஷம் ஆகுது. அதுக்கு முன்னாடி மலையங்காட்டுல கூலி வேலைக்குப் போய் வந்தவங்க நாங்க. குழு தொடங்கி ரெண்டு வருஷத்துல மிளகாய்ப்பொடி தயாரிச்சு பாக்கெட் போட்டு வித்து வந்தோம். இப்பவும் எங்க குழுவுல சில பொண்டுக அதைச் செஞ்சு வர்றாங்க. அதுல நாங்க ரெண்டு பேர் மட்டும் கூட்டா சேர்ந்து இந்த ஊர்ல ஒரு பர்னிச்சர் கடை வெச்சு நடத்தி வர்றோம்!" என மலைக்க வைக்கிறார் சித்தரேவு எஸ்.லெட்சுமி.

"எங்க சமூகத்துல அவ்வளவா யாரும் வெளில கூலி வேலைக்குப் போய் வர மாட்டாங்க. அதனால நானும் வீட்டுல 'சும்மா' தான் இருந்தேன். சக்தி அறக்கட்டளைக்காரங்க தையல் பயிற்சி தந்தாங்க. நானும் சேர்ந்து கத்துக்கிட்டேன். எனக்கு இப்ப நல்லா தைக்கவும் தெரியும். மத்தவங்களுக்குக் கத்துத் தரவும் முடியும். சுய உதவிக் குழு மூலமா அஞ்சு தையல் மிஷின் போட்டு, இப்ப தையல் பயிற்சிப் பள்ளி நடத்தி வர்றேன். வர்ற துணிகளைத் தைச்சும் தர்றேன்!" எனக் கூறுகிறார் மெகர் பானு.

"எங்களுக்குத் தெரிஞ்சதெல்லாம் இதோ... எதுத்தாப்ல தெரியுதே அந்த மலையங்காட்ல கொடுக்கற கூலி வேலைதாங்க. லேசுல எல்லார்க்கும் கெடைச்சுடும்ங்கிறீங்களா? ம்ஹூம். அப்படி இருந்தப்ப இந்தச் சுத்துவட்டார கிராமப்புற உழைக்கும் பெண்கள் மத்தியில நம்பிக்கை ஒளியென, எங்களுக்கெல்லாம் வெளிச்சம் தந்துக்கிட்டு இருக்கறவங்க எங்க 'சக்தி ஜோதி!" எனக் குறிப்பிடுகிறார் நாக லெட்சுமி.

# உழைக்கும் மகளிர்..

"மருத நதி சுழித்தோடும் வளமான மருத நிலப் பகுதி. நெடிதுயர்ந்த தென்னை மரங்களே நிலையான சாட்சி. அப்படி இருந்தும், எங்கள் பகுதி மங்கையர் வாழ்வில் வளமற்றுப் போனது ஏன் என்கிற கேள்வி என்னைச் சிந்திக்க வைத்தது. கிராமப்புறப் பெண்களின் குடும்பப் பொருளாதாரச் சூழல் மேம்படவும், அவர்கள் வாழ்வில் சுதந்திரமாய் இயங்கவும் உருவானது சக்தி அறக்கட்டளை" என்கிறார் அதன் இயக்குனர் கவிஞர் சந்திர ஜோதி.



# உயர்த்தும் 'சக்தி'!

''2001ல் இந்த அறக்கட்டளை தொடங்கப்பட்டது. கிராமங்கள்தோறும் நேரில் சென்று, பெண்களிடையே பேசினேன். அவர்களை விழிப்புணர்வு பெற வைத்தேன். மெல்ல மெல்ல மகளிர் சுய உதவிக் குழுக்கள் உருவாகின. அந்தந்தப் பகுதிகளில் அவர்களை ஒன்றிணைத்தேன். இந்தச் சின்னப் பெண் எப்படி இதனையெல்லாம் நிர்வகிக்கப் போகிறது என என் முகம் எதிரே பரிகசித்தனர் பலர். அவற்றையே சவாலாக ஏற்றேன். தொடர்ந்து களமிறங்கிச் செயல்பட்டேன்.

தற்போது திண்டுக்கல், தேனி, ஈரோடு மற்றும் கோவை ஆகிய நான்கு மாவட்டங்களில் சுமார் நான்காயிரம் மகளிர் சுய உதவிக் குழுக்கள். சுமார் நாற்பத்தைந்தாயிரம் உழைக்கும் மகளிர். அவரவர் வாழ்வில் பொருளாதார மேம்பாடு. அவர்கள் வாழ்வதோ வெகு சிறப்போடு. எங்கள் பயணம் தொடர்கிறது. பாதை நீள்கிறது.




'இரண்டி இடத்தை மட்டுமே
தனக்காக எடுத்துக் கொண்டு தன்
அன்பை அகல
விரித்திருந்தது மரம்'

கவிஞர் தேவதேவன் எழுதிய கவிதை வரிகளுக்கேற்ப தொடர்ந்து தன் அன்பின் கிளைகளைப் படர விட்டுக் கொண்டுள்ளது சக்தி அறக்கட்டளை!'' என்கிறார்.

நேரமாச்சு. நான் உன்னை ட்ராப் பண்றேன்'' எழுந்து கொண்டான் சுரேஷ்.

''வேணாம் நான் போய்க்கறேன்'' அவசரமாகச் சொன்னாள் அவள்.



''ப்ளீஸ் அர்ச்சனா, அநேகமாக இதுதான் நம்மோட கடைசி சந்திப்பு. இதிலயும் ஒருத்தருக்கு ஒருத்தர் முறைச்சுக்கிட்டுதான் கிளம்பணுமா?'' சுரேஷின் குரல் இலேசாகத் தழு தழுத்தது. ''நாம இத்தனை நாள் கணவன், மனைவியா பழகினதுக்கு அவ்வளவுதான் மரியாதையா?''

◆ என்.சொக்கன் ◆

அர்ச்சனா அவனையே எரித்துவிடுவது போல் பார்த்தாள். ''அநாவசியமாகக் கற்பனைகளை வளர்த்துக்காதே சுரேஷ்'' என்றாள். ''நாம மறுபடி சேரணும்ன்னெல்லாம் நான் எப்பவும் நினைக்கறது கிடையாது. இதோ, இப்போ இந்த ஹோட்டல் வாசலைத் தாண்டி ஆட்டோ ஏறும்போது, உன்னை மறந்துடுவேன், நிரந்தரமா.''

சுரேஷ் முகத்தில் சட்டென்று சிவப்பு சேர்ந்து கொண்டது. சற்றே கோபமாக, ''நான் ஒண்ணும் உன் காலில் விழுந்து கெஞ்சறதுக்காக இங்கே வரலை'' என்றான்.

''ஷ்யூர், நானும் அதை எதிர்பார்க்கலை'' என்றாள் அர்ச்சனா.

அடிபட்ட பாவனையில் அவளைப் பார்த்தான் சுரேஷ். ''நாம மறுபடி சந்திச்சிருக்கவே கூடாது'' என்றான்.

''அப்படியில்லை சுரேஷ், நாம முதல் முறை சந்திச்சதுதான் ரொம்பத் தப்பு. அந்த அசம்பாவிதம் மட்டும் நடக்கலைன்னா, ரெண்டு பேரும் அவங்க வழியில சந்தோஷமாப் போய்க்கிட்டிருந்திருப்போம். இந்தக் கல்யாணம் நடந்திருக்காது.''

சுரேஷ் பரிதாபகரமாகத் தலைகுனிந்து அமர்ந்திருந்தான்.

**நா**ளை மறுநாள், அவன் அமெரிக்கா புறப்படுகிறான். மிகப் பெரிய பொறுப்பு. அவனை நம்பி ஒப்படைத்திருக்கிறார்கள். 'ஆறு மாதம் அங்கேயே தங்கியிருந்து எல்லாவற்றையும் முடித்துக் கொடுத்துவிட்டு வா' என்று வாழ்த்தி வழியனுப்புகிறார்கள்.

அலுவலகத்தில் ஏகப்பட்ட பேர் இப்படி ஒரு வாய்ப்பு அமையாதா என்று தவம் கிடக்கிறார்கள்.

# வேறொரு வெளிச்சம்

ஆனால், சுரேஷால்தான் இது முடியும் என்கிறது மேலிடம்.

இந்த முதல் பயணம் வெற்றிகரமாக முடிந்தால், இன்னும் பல வாய்ப்புகள் தேடி வரும். சம்பளம், சௌகர்யங்கள், சமூக நிலை என்று எல்லாவற்றிலும் படிப் படியாக உயரலாம். ஆனால், இந்த வெற்றிப் பயணம் தனிமையின் துணையோடு.

சுரேஷ் ஏதோ பேசக் காத்திருப்பது போல் அர்ச்சனாவின் முகபாவம் இருந்தது.

நிறையப் பேசியாகிவிட்டது. திருமணத்துக்குப் பிறகு, அவர்கள் இருவருடைய உலகங்களுக்கும் இடையில் இருந்த பள்ளத்தாக்கை, பேச்சுகள்தான் நிரப்பின.

ஆனால், பள்ளத்தைத் தாண்டி மறுபுறம் சென்ற பிறகுதான், இக்கரைக்கு, அக்கரை பச்சை என்று புரிந்தது.

என்னதான் கணவன், மனைவியானாலும், ஒவ்வொருவர் உலகமும் தனித்தனிதானே? இத்தனை வருடங்களாகக் கட்டமைத்துக் கொண்ட சுயத்தை, ஒரு தாலிக் கயிறு மாற்றி அமைத்துவிட முடியுமா?

ஆனால், நாட்டில் திருமணங்களுக்கா குறைச்சல்? தினந்தோறும் நூற்றுக்கணக்கான, ஆயிரக்கணக்கான ஜோடிகள் மணமுடிக்கிறார்கள். நம்முடைய தந்தை, தாய், தாத்தா, பாட்டியெல்லாம் அவரவர்க்கு உரிய தனித்தனி உலகங்களுடன், ஆனால் டைவர்ஸ் என்று கோர்ட் படியேறாமல் வாழ்ந்து முடித்தது எப்படி?

அர்ச்சனா, ஒருமுறை கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டாள். ரொம்ப நேரமாகி விட்டது. ஆனால், சுரேஷை இந்த நிலைமையில் விட்டுக் கிளம்பக் கஷ்டமாக இருக்கிறது.

இருவரும் பிரிய சட்டப்படி என்ன செய்ய வேண்டுமோ அதையெல்லாம் செய்தாகி விட்டது. இன்னும் நீதிமன்ற உத்தரவுதான் பாக்கி. நடுவே, சுரேஷின் அமெரிக்கப் பயணத்தை முன்னிட்டு, இப்படி ஒரு சந்திப்பு.

'அப்படியானால், நீ இன்னும் சுரேஷை நேசிக்கிறாயா?' அவளுக்குள் ஒரு கேலிக் குரல் எழுந்தது.

'ரப்பிஷ்' என்று அதனை அடக்கினாள் அர்ச்சனா. இது காதல் இல்லை; மனிதத்தன்மை!

அர்ச்சனாவுக்குச் சட்டென்று சுஜாதாவின் நினைவு வந்தது. அலுவலகத்தில் அவளுடைய பாஸ். ஆனால், அந்த மேலதிகாரி தோரணையைக் கொஞ்சமும் காண்பிக்காமல் இனிமையாகப் பழகுகிற ஆத்ம சிநேகிதி.

''உங்ககிட்டே எந்தப் பொறுப்பை ஒப்படைச்சாலும், அதுக்கப்புறம் நான் அதைப் பத்திக் கவலைப்படறதே இல்லை அர்ச்சனா'' என்று அடிக்கடி சொல்வார் சுஜாதா. ''இந்த வயசில, இப்படி ஒரு பொறுப்புணர்ச்சி ரொம்ப அபூர்வம். கூட வேலை செய்யற எல்லோரையும் அன்பா



**காயப்படுத்தி சூடுபோட்டு தனிமைப்படுத்தியும் மனத்தை நனைக்கும் இசையைப் பொழிகிறது புல்லாங்குழல்!**

**–பூர்ணா**

அரவணைக்கப் போறீங்க, உங்க மேல யாரும் குறைசொல்ல முடியாதபடி பர்ஃபெக்டா நடந்துக்கறீங்க, நிஜமா, நீங்க இந்த ஆஃபீஸுக்குக் கிடைச்ச ஒரு வரம்தான்'' என்பார்.

ஆனால், இந்த வரம் திருமணத்தில் தோற்றது. தோல்வி என்றால், சாதாரணத் தோல்வி அல்ல. கண்ணாடிப் பாத்திரம் போல், சுக்குநூறாக உடைந்து சிதறிவிட்டது. இனிமேல் யாராலும் ஒட்டவைக்க முடியாது.

சுரேஷ், அர்ச்சனா இருவரும், ஒரே நேரத்தில் நிமிர்ந்து பார்த்தார்கள். அவர்களுடைய கண்கள் சட்டென்று கலந்து, விலகிக் கொண்டன. இருவருக்குமிடையில் இருக்கும் நான்கடி அகல மேஜை, பல மைல் தூரமாகத் தோன்றியது.

''நான் கிளம்பறேன் சுரேஷ்'' என்றாள் அர்ச்சனா. ''ஆல் தி பெஸ்ட்.''

''எதுக்கு?''

''உன்னோட யு.எஸ். ட்ரிப்புக்கு.''

''தேங்க்ஸ்'' என்றபடி அவனும் எழுந்து கொண்டான். ''நான் வாசல் வரைக்கும் உன்னோட வரலாமா?''

''நோ ப்ராப்ளம்.''

அவர்கள் மௌனமாக நடந்தார்கள். வெளியே நன்றாக இருட்டியிருந்தது. சற்றுத் தொலைவில் விளக்கு வெளிச்சம் ஜொலிஜொலித்தது. ''அங்கே ஆட்டோ கிடைக்கும்'' என்றாள் அர்ச்சனா.

''பரவாயில்லை, உனக்கு ஆட்டோ பிடிக்கக் கொடுத்துட்டு நான் கிளம்பறேன். நீ பேசாம டூவீலர் வாங்கிடலாம்ல?'' என் றான் சுரேஷ்.

''எதுக்கு? கை தட்டினா ஆட்டோ வருது. அது மட்டுமில்லை, நான் இப்பல்லாம் அதிகம் வெளியே போறதில்லை. ஆஃபீஸுக்கு பஸ்ல போறேன். அதுக் கப்புறம் ஏதும் அவசர வேலைன்னா, ஆட்டோ போதும்.''

அவன் மௌனமாக அவளைப் பின்தொடர்ந்தான். அர்ச்சனாவின் நடையில் கூடுதல் கம்பீரம் கலந்திருப்பதாகத் தோன்றியது. அதற்குக் காரணம், தன்னை நிராகரிக்கிற அலட்சியம்தான் என்று புரிந்தபோது, அவனுக்குள் வலி பரவியது.

கடைத்தெருவை நெருங்கும் நேரத்தில், ''நான் எப்ப திரும்பி வருவேன்னு தெரியாது அர்ச்சனா... ஒருவேளை, நான் அமெரிக்காவிலேயேகூட செட்டிலாயிடலாம்.''

சிரித்தாள் அவள். ''பத்து மடங்கு சம்பளம், கார், வீடு, சூப்பர் வசதிகள், கசக்குமா?''

''அதுக்கில்லை, பழகின ஊர்ல வெறுமையா வாழறதை விட, புது ஊர்ல தனியா காலம் தள்ளறது சுலபம்.''

''அப்பஎன்னா? நீ இன்னொரு கல்யாணம் பண்ணிக்கப் போறதில்லையா?''



## பெரிய அந்தோணியார்!

**விண்ணை முட்டும் அழகோடு கம்பீரமாக உயர்ந்திருக்கிறது திண்டுக்கல் மாரம்பாடி புனித பெரிய அந்தோணியார் ஆலயம். தாடிக்கொம்பிலிருந்து பதினேழாவது கிலோ மீட்டரில் இருக்கும் இந்த ஆலயம் கோதிக் கட்டடக் கலையின் அமைப்பைக் கொண்டது. திண்டுக்கல் மாவட்டத்திலிருக்கும் கிறிஸ்தவ ஆலயங்களில் மிகப் பெரியது இது.**

**- ஆண்டனி பாஸ்கர், மாரம்பாடி**

ஆச்சர்யமாகக் கேட்டான் அவன்.

"எதுக்கு விஷப் பரீட்சை? ஒரு தடவை கஷ்டப்பட்டு, உன்னையும் கஷ்டப்படுத்தினது போதாதா?"

அவள் பதில் பேசவில்லை. ஆனால், நடையில் சற்றே வேகம் குறைந்திருப்பதாகத் தோன்றியது.

இந்தக் கடைசிச் சந்திப்பைத் தவிர்த்திருக்க வேண்டும் என்று எண்ணிக் கொண்டாள் அர்ச்சனா. பிரிவு, எங்கள் இருவருக்குமே நல்லவிதமாகத்தான் முடிந்திருக்கிறது. அவரவர் வேலையில் முழு கவனம் செலுத்தி முன்னேறுவது



**மனைவியின் உலகத்தைக் கணவனும், கணவனின் உலகத்தை மனைவியும், மனமார அங்கீகரித்திருக்கலாம்.**



சாத்தியமாகியிருக்கிறது. கணவன், மனைவி என்கிற பொருந்தாத சங்கிலிகளில் மாட்டிக் கொண்டிருந்தால், குட்டையாகத் தேங்கி நிற்க நேர்ந்திருக்கும்; நதி போல் ஓடியாட முடியாது.

வாழ்க்கையில் எல்லாம் கிடைத்துவிட்டது. இருவரும் அவரவர் துறையில் முன்னேறிக் கொண்டிருக்கிறோம். போதாதா? கைகோத்து நடந்தால்தான் பயணமா?

எத்தனைவிதமாக யோசித்துச் சமாதானம் செய்துகொண்டாலும், தங்களுக்குள் ஓர் ஏக்கம் மிஞ்சியிருப்பதை அவர்கள் இருவராலும் உணர முடிந்தது.

பிரச்னை என்னவென்றால், இந்த எதிர்பார்ப்பு இருவருக்குமே இருந்தது. ஆனால், அவனுடைய எதிர்பார்ப்புகள் அவளுக்குத் தெரியவில்லை; அவளுடைய எதிர்பார்ப்புகளை அவனும் கவனிக்கத் தவறிவிட்டான். இருவருக்கும் பொருந்தவில்லை என்று பிரிய முடிவெடுத்த பிறகுதான், வெயிலில் தெரிகிறது நிழலின் அருமை!

கொஞ்சம் மனம்விட்டுப் பேசியிருக்கலாம். ஈகோ பிடிவாதம் இடைவராமல், மனைவியின் உலகத்தைக் கணவனும், கணவனின் உலகத்தை மனைவியும் மனமார அங்கீகரித்திருக்கலாம். இப்படி நான் முழுவதும் வெற்றிகளைச் சந்தித்துவிட்டு, வங்கிக் கணக்கில் பணம் குவிய, இரவில் ஆளில்லாத தனிமைக் கூட்டுக்குத் திரும்புகிற அவலம் நேர்ந்திருக்காது.

இதையெல்லாம், இப்போது யோசித்துப் பிரயோஜனம் இல்லை. மிகத் தாமதமாகி விட்டது.

மென்மையான நேசத்தை, வார்த்தைக் கத்திகளால் கிழித்துப் போட்டு விட்டோம். நாவினால் சுட்ட வடு என்பாரே வள்ளுவர்!

ஆனால், இதே திருவள்ளுவர்தானே, இன்னொன்றும் சொல்லியிருக்கிறார், 'காதல் பார்வை நோய் தரும், பின்னர் அதே பார்வை, அந்த நோய்க்கு மருந்தும் போடும்!'

பார்வைக்குப் பொருந்தும் விதிமுறை பேச்சுக்குப் பொருந்தாதா? வார்த்தைகளால் சுட்ட காயத்துக்கு, வார்த்தைகளாலேயே மருந்து போட்டுக் குணப்படுத்திவிட முடியாதா?

"அர்ச்சனா, நாம கொஞ்சம் பேசணுமே" என்றான் சுரேஷ்.

அதற்காகவே காத்திருந்தது போல், "பேசலாமே" என்றாள் அவள்.

அவர்கள் திரும்பி நடந்தார்கள், வேறொரு வெளிச்சத்தை நோக்கி. ●

திண்டுக்கல் மாவட்ட ஸ்பெஷல்

# கோர்ட்டுக்குப் போன வாழைப்பழம்!

"வாழைப்பழம் இருக்கு... சிறுமலைப் பழம் இருக்கா என்று கேட்டால் 'அதாங்க இது...' என்று மக்களைக் குழப்பி வந்தனர் சில வியாபாரிகள். இதை எதிர்த்து நாங்க கோர்ட்டுக்கே போயிட்டோம்" என்கின்றனர் சிறுமலை வாழைத்தோட்டக்காரர்கள்.

அவ்வளவு சிறப்பு வாய்ந்ததா சிறுமலைப் பழம் என்று கேட்டால், நம் மீதும் கேஸ் போட்டு விடுவார்களோ எனப் பயந்து, "சிறுமலைப் பழத்தோட ஸ்பெஷாலிட்டியை நீங்களே சொல்லுங்க" என்றோம்.

சிறுமலைப் பழ வியாபாரி என்.காசிமயன், "இந்த வாழைக்கு தண்ணீர் அதிகம் தேவையில்லை. சஞ்சீவி மலைக் காத்துல விளையற பழம். அதனாலதான் அவ்வளவு ருசி" என்கிறார்.

"நாற்பத்தைஞ்சு வருஷமா சிறுமலைப் பழ வியாபாரம் செய்யறேன். ஒருமுறை சீப்பு தொங்க விட்டா அறுபது நாள் வரைக்கும் தாங்கும். நாளானாலும் தோல் கறுக்குமே தவிர, பழம் கெட்டுப் போகாது. ருசி கூடுமே தவிர குறைஞ்சு போகாது" என்று பிள்ளையின் பெருமைகளைப் பேசும் தகப்பன் போல அடுக்குகிறார்.

சரி... கோர்ட்டுக்குப் போனாங்களே... தீர்ப்பு என்னாச்சுன்னு கேக்கறீங்களா?

"சிறுமலைப் பழத்தை தாரிலிருந்து சீப்பு சீப்பாகப் பிய்த்து எடுக்க வேண்டும். மற்ற வகை வாழைப்பழங்களைத் தாரிலிருந்து கத்தியால் வெட்டி எடுக்க வேண்டும் என்பதுதான் கோர்ட் வழங்கிய தீர்ப்பு. பிய்த்து எடுக்கறதால சீப்புகளில் ஒட்டியிருக்கிற நார்தான் அது சிறுமலைப் பழம் என்கிறதுக்கு சாட்சி" என்கிறார் காசிமயன். ○

"ஃபோன்ல பேசினதை வச்சே டாக்டர் ஒரு ஹார்ட் ஸ்பெஷலிஸ்ட்னு எப்படிக் கண்டுபிடிச்சீங்க?"

"அதுவா... எங்கே இருந்து பேசறீங்கன்னு கேட்டதற்கு, இந்தியாவின் இதயப் பகுதியில் இருந்து பேசறேன் னாரே..."

- ஜி.அப்துல்பாரி, பழனி.

"ரிடையர் ஆகும்போது அவருக்குப் பணமுடிப்புடன், அருகம்புல்லும் தர்றாங் களே... ஏன்?"

"கம்பெனிக்கு மாடாய் உழைத்தாராம்!"

- ஏ. விக்டர் ஜான், கொளத்தூர்.










"சாப்பிடும்போது கூட என் கணவருக்கு ஆஃபீஸ் ஞாபகம்தான்."

"எப்படிச் சொல்றே?"

"உப்பு வேணும்னு கேட்டுட்டு டைனிங் டேபிளுக்குக் கீழே கையை நீட்டறார்!"

- ஏ.விக்டர் ஜான், கொளத்தூர்.

"என்னது, இதுவரை டாக்டர் செய்த ஆபரேஷன் தோல்வியடைந்ததே இல் லையா?"

"ஆமாம், எல்லா ஆபரேஷனையும் கனவுலதான் செய்திருக்கிறார்."

- ஜி.அப்துல்பாரி, பழனி.

"நம்ம பையனைத் திருத்தவே முடியாது."

"ஏன் என்ன செய்யறான்?"

"ரோப் கார்லயும் ஃபுட் போர்டுலதான் வருவேன்னு சொல்றான்."

- பி.பாலாஜி கணேஷ், கோவிலாம்பூண்டி

"சூப்பரா சமைக்கத் தெரிஞ்சும் ஏன் சுமாரா சமைக்கறீங்க?"

"சூப்பரா சமைச்சா எனக்கேதும் மீதி வைக்க மாட்டாளே என் மனைவி...!"

- ஜி. அப்துல்பாரி, பழனி.

"தலைவர் உருக்கமாகப் பேசியும், தாய்க்குலமெல்லாம் கண்ணீர் விடவில்லை என்பதற்காக இப்படியா பண்ணுவார்?"

"என்ன பண்ணினார்?"

"தாய்க்குலத்தின் மீது கண்ணீர்ப் புகைக்குண்டு வீசிவிட்டார்."

- ஏ.விக்டர் ஜான், சென்னை-99.

"என்னப்பா டெய்லரை கோர்ட்டுக்கு அழைச்சிட்டு வந்திருக்கே?"

"சட்டத்திலிருக்கிற ஓட்டைகளைத் தைக்கிறதுக்கு ஸார்."

- ஏ.விக்டர் ஜான், கொளத்தூர்.

"பொண்ணு ரொம்பப் புத்திசாலின்னு எப்படிச் சொல்றீங்க?"

"பலகாரங்கள் செய்யத் தெரியுமான்னு கேட்டதற்கு, சிலகாரங்கள்தான் செய்யத் தெரியும்னாளே..."

- ஜி.அப்துல்பாரி, பழனி.



# பலகாரமா... சிலகாரமா...?

# வந்தியத்தேவன் பிரவேசம்!

**"இதுதானே ஜோசியர் வீடு?"**
**"ஆமாம். நீ யார்?"**
**"ஜோசியர் இருக்கிறாரா?"**
**"உள்ளே போகக்கூடாது!"**
**"அப்படித்தான் போவேன்!"**
**"விட மாட்டேன்."**
**"ஜோசியரைப் பார்க்க வேண்டும்."**
**"அப்புறம் வா."**
**"அப்புறம் வர முடியாது. எனக்கு மிக்க அவசரம்!"**
**"அடே! அடே! நில்! நில்!"**
**"சற்று விலகிப் போ! தடுத்தாயோ, கொன்றுவிடுவேன்..."**
**"ஐயா! ஐயா! வேண்டாம்! உள்ளே போக வேண்டாம்!"**



இத்தகைய குழப்பமான கூச்சல் நெருங்கி நெருங்கிக் கேட்டது; படார் என்று வாசற் கதவு திறந்தது. அவ்வளவு பிரமாதமான தடபுடலுடன் ஒரு வாலிபன் உள்ளே திடும் பிரவேசமாக வந்தான். அவனைப் பின்னாலிருந்து தோள்களைப் பிடித்து இழுக்க ஒருவன் முயன்று கொண்டிருந்தான். வாலிபன் திமிறிக்கொண்டு வாசற்படியைக் கடந்து உள்ளே வந்தான். வந்த வாலிபன் யார் என்று வாசகர்கள் ஊகித்திருப்பார்கள். நமது வீரன் வந்தியத்தேவன்தான்!

வீட்டுக்குள்ளே இருந்த மூன்று பேருடைய கண்களும் ஏக காலத்தில் அவ்வீரனைப் பார்த்தன.

வந்தியத்தேவனும் உள்ளிருந்தவர்களைப் பார்த்தான். இல்லை; உள்ளேயிருந்தவர்களில் ஒருவரைத்தான் பார்த்தான். அது கூட இல்லை. குந்தவை தேவியை அவன் முழுமையாகப் பார்க்கவில்லை. அவளுடைய பொன் முகத்தை மட்டுமே பார்த்தான். முகத்தையாவது முழுமையும் பார்த்தானா என்றால், அதுவும் இல்லை! வியப்பினால் சிறிது விரிந்திருந்த அவளுடைய பவளச் செவ்வாயின் இதழ்களைப் பார்த்தான்; கம்பீரமும் வியப்பும் குறும்புச் சிரிப்பும் ததும்பியிருந்த அவளுடைய அகன்ற கண்களைப் பார்த்தான். கண்ணிமைகளையும் கரிய புருவங்களையும் பார்த்தான். தங்க வர்ண நெற்றியைப் பார்த்தான். குங்குமச் சிவப்பான குழிந்த கன்னங்களைப் பார்த்தான். சங்கையொத்த வழுவழுப்பான கழுத்தைப் பார்த்தான்.

இவ்வளவையும் ஒரே சமயத்தில் தனித்தனியாகப் பார்த்தான். தனித்தனியாக அவை மனத்தில் பதிந்தன.

இதெல்லாம் சில விநாடி நேரந்தான். உடனே சட்டென்று திரும்பிச் சோதிடருடைய சீடனை நோக்கி, "ஏனப்பா, உள்ளே பெண் பிள்ளைகள் இருக்கிறார்கள் என்று நீ சொல்லக் கூடாது? சொல்லியிருந்தால் நான் இப்படி வந்திருப்பேனா?" என்று கேட்டுக் கொண்டே சீடனை மறுபக்கம் தள்ளிக் கொண்டு வாசற்படியை மீண்டும் கடந்தான். ஆயினும் வெளியில் போவதற்குள் இன்னும் ஒரு தடவை குந்தவைதேவியைத் திரும்பிப் பார்த்து விட்டுத்தான் போனான்.

- 'பொன்னியின் செல்வன்'
புதினத்திலிருந்து...

## வண்ணத் தூரிகை

## அமரர் கல்கி



# தாடிக்கொம்பு கள்ளழகர்!

திண்டுக்கல்லிலிருந்து கரூர் போற வழியில இருக்கு தாடிக்கொம்பு. ஒரு காலத்துல பனைமரங்கள் அடர்ந்த கிராமமா இருந்திருக்கு. தெலுங்கு மொழிச் சொல் அது. 'தாட்டி'ன்னா பனை மரம். 'கூம்புலு'ன்னா கூட்டம். அப்படியே சொல் வழக்குல 'தாடிக்கொம்பு'ன்னு ஆகிப் போச்சு. பனை மரக்கூட்டம் இப்ப இல்ல. அதனால் என்ன? இந்த ஊருக்கே பெருமைசேர்க்கறாப்ல 'சௌந்தர ராஜப் பெருமாள்' கோயில் கொண்டிருக்கிறார்.



மதுரை கள்ளழகருக்கு உண்டான பிரார்த்தனை ஸ்தலம். இங்கே பெருமாள்கிட்ட 'பெட்டிஷன்' போட்டாலே, அது கள்ளழகர் காதுல 'ஓது'னதுக்குச் சமம். இந்தப் பெருமாளும் சாதாரண பெருமாள் இல்லீங்க. மனுசனாப் பொறந்தவங்களுக்கு வர்ற சகல சங்கடங்களையும் தீர்த்து வெச்சு, சௌந்தர்யமா அவங்களை வாழ வெச்சு அழகு பார்க்கிற சௌந்தர்யப் பெருமாளுங்க இவரு. அவர் தவிரவும் அத்தனை தெய்வங்களும் இங்கே இருக்கு.

ரதி - மன்மதன் சன்னிதி. வியாழன் அன்னைக்கு ரதிமன்மத பூஜை. திருமணத் தடை நீங்கி, கல்யாணம் கட்டி வைக்கிறது ரதி மன்மதனோட காரியம்ங்க. கல்யாணம் ஆயிடுச்சு. அப்புறம் குழந்தைப் பேறு? தம்பதி சமேதரரா ஸ்ரீவேணுகோபாலன் சன்னிதி. மாசத்துல ரோகிணி நட்சத்திரத்தன்னைக்கு சிறப்புப் பூஜை. குழந்தை பாக்கியத்துக்கு கியாரண்டி. அடுத்து ஹயக்ரீவர் சன்னிதி. சரஸ்வதிக்கே ஞான குரு. கல்விக்கு அதிபதி. அதுக்குப் பக்கத்துல வாசுதேவ தன்வந்திரி. இவரு பெருமாளுக்கே வைத்தியம் பார்த்தவரு. அமாவாசை நாளன்று சிறப்பு வழிபாடு. தன்வந்திரி சன்னிதியில பக்தர்களுக்குப் பிரசாதம், லேகியம் மற்றும் தைலம்.

தொழில் சிறப்பா நடத்தி வைக்க சக்கரத்தாழ்வார். இவரு ரொம்ப சூட்சுமக்காரர். எதையுமே சொல்லாம சொல்லி விளங்க வைக்கிறவரு. அதான் பாருங்களேன். அவரு பின்னாடி வட்ட வடிவமா ஒரு சக்கரத்தை நிறுத்தி வெச்சிருக்காரு. சக்கரம் சுழன்றே ஆகணும். உங்க தொழிலும் அப்படித்தான். ஏத்த இறக்கம், இறக்கம் ஏத்தத்தோட சுழண்டுக்கிட்டே இருக்கும்னு சொல்லாம சொல்றாரு. தொழில்னா கொடுக்கல் வாங்கல் பிரச்னை இருக்குமே. அதனையும் தீர்த்து வைக்க, இங்கே ஒரு சன்னிதி இருக்கு. (இது எப்படி இருக்கு!)

கொடுக்கல் வாங்கல் சிக்கல்களைத் தீர்த்து வைக்கிறதுக்குன்னே, சொர்ண பைரவர் இங்கே தனி சன்னிதி கொண்டிருக்கார். தேய்பிறை அஷ்டமி சிறப்புப் பூஜை. அன்னைக்கு





றிருக்கா. ஸ்ரீதேவி பூதேவி உடனாய செளந்தர ராஜப் பெருமாள் பிரதான மூர்த்தி. நம்ம எல்லாரையும் மோட்சத்துக்கு அழைச்சிட்டுப் போறவரு. இல்லே... அனுப்பி வைக்கிறவரு. மனுஷ வாழ்க்கையில இதைவிட வேறென்னங்க வேணும்?

மதுரையில் கள்ளழகர் வைகையாத்துல இறங்கி, கிராம வலம் அப்புறம் நகர்வலம் வர்ற மாதிரியே, இந்தக் கோயில் செளந்தர ராஜப் பெருமாளும், சித்திரை மாசத்துல குடகனாறுல இறங்கி அஞ்சு நாள் திண்டுக்கல் பூரா சுத்தி வர்றாரு. சித்திரைத் திருவிழா அது. ஆடி மாசம் பௌர்ணமியில கோயில் திருத்தேர்.

விஜயநகரப் பேரரசர் காலத்திய சிற்பக் கலைக்குச் சிறந்த எடுத்துக்காட்டு இந்தக் கோயில். தாயார் சன்னிதி மகா மண்டபம், கண்கொள்ளாக் காட்சி. அதனைச் சிற்ப மண்டபம்னே குறிப்பிடு றாங்க. வரிசையா ஏழு, ஏழு தூண்கள். ஒவ் வொண்ணுலயும் ஒவ்வொருவிதமான சிற்பம். இராஜ கோபுர கீழ்த்தளத் தூண்கள்ல விழிகளை விட்டு அகலாத அழகிய சிற்பங்கள். கற்சிற்பங்களின் கவின் அழகு, கலையாத நினைவு.

மோட்சத்துக்குப் போற அவசரத்துல இன்னொண்ணைச் சொல்ல மறந்துட்டேனுங்க. ஒரு மனுசனுக்குக் கொடுக்கல் வாங்கல் சிக்கல்னா, கடன் தொல்லைன்னு ஒண்ணு இருக்குமா இல்லியா? அந்தக் கடன் தொல்லைகளைத் தீர்த்து வைக்கறதுக்குன்னே லெட்சுமி நரசிம்மர் சன்னிதி. மாசத்துல பௌர்ணமி, பிரதோஷம் அப்புறம் சுவாதி நட்சத்திரத்தன்னைக்கு சிறப்புப் பூஜை. அப்புறம் என்ன? சகல செளந்தர்யமும் பெற்று வாழ்ந்து மகிழ, தாடிக்கொம்பு செளந்தரராஜப் பெருமாள் கோயிலுக்கு ஒரு தபா போய்ட்டு வாங்க.

நிறைய கூட்டம்னு சொல் றாங்க. (கொடுக்கல் வாங்கல் பிரச்னை யாருக்குத்தான் இல்லே?). இவ்வளவும் வந்தா நமக்கு மனசு தைரியம் இருக்கணுமா இல்லியா? மனோ தைரியம் தர்றதுக்குன்னே குடி கொண்டிருக்காரு ஆஞ்ச நேயரு. சனிக்கிழமைதோறும் அவருக்கு சிறப்புப் பூஜை.

தைரியம் தந்து கூடவே பொன்னும் பொருளும் அள்ளி அள்ளித் தர்றதுக்கு மகா லட்சுமி, கல்யாண செளந்தர வல்லி தாயாரா இங்கே வீற்



# குற்றாலத்தில் சிற்றிதழ் மேளா..!




''ஒரு சிற்றிதழ் வெளிவரும்போதே, அதன் கடைசி இதழும் எப்போது என்று தீர்மானிக்கப்பட்டு விடும் என்று வேதனை நிறைந்த வேடிக்கையோடு குறிப்பிடுவார்கள். அந்த நிலையிலிருந்து சிற்றிதழ்களை மீட்டெடுத்து, மீண்டும் தொய்வின்றி நடத்திட ஆலோசனை அளிப்பதே எங்கள் சங்கத்தின் தலையாய பணி'' என்கிறார் மகாகவி சிற்றிதழ் ஆசிரியர் வதிலை பிரபா.

என்ன சங்கம்?

''உலகத் தமிழ்ச் சிற்றிதழ்கள் சங்கம். இதன் தலைமையிடமே வத்தலகுண்டுதான்! சும்மாவா... பி.ஆர்.ராஜம் அய்யர், பி.எஸ்.ராமையா, சி.சு.செல்லப்பா... போன்ற எழுத்துலக பிதாமகன்களைத் தந்த ஊர் ஆயிற்றே'' என்கிறார்.

இப்படி ஒரு சங்கம் அமைக்கும் எண்ணம் எப்படி ஏற்பட்டது?

''முதுபெரும் எழுத்தாளர் வல்லிக்கண்ணனின் உந்துதல்தான் இந்தச் சங்கத்துக்கு அஸ்திவாரம். நண்பர்கள் சொர்ணபாரதி, நந்தவனம் சந்திரசேகரன் ஆகியோரின் தோழமையும் தோள் கொடுக்க, திருச்சி உச்சிப்பிள்ளையார் கோயிலில் உதயமானது இந்தச் சங்கம்.''

உயர்ந்த எண்ணம் உயர்ந்த இடத்திலேயே செயல்வடிவம் பெற்றிருக்கிறது. சரி, இந்தச் சங்கம் என்னென்ன செய்கிறது?

''உலகம் முழுவதும் உள்ள தமிழ்ச் சிற்றிதழ்களை ஒருங்கிணைத்து நட்புறவை வளர்க்கிறது.

ஆண்டொன்றுக்கு பன்னிரண்டு சிற்றிதழ்களைத் தேர்வு செய்து, தலா ஆயிரம் ரூபாய் ஊக்கத் தொகை அளித்து வருகிறோம். தற்போது செம்மொழி உயராய்வு மையத்திலிருந்து, சிற்றிதழ்களுக்கு நிதியுதவி பெற்றுத் தரும் முயற்சியிலும் ஈடுபட்டுள்ளோம். உலகம் முழுவதுமாக நூற்றுப்பத்து சிற்றிதழ்கள், எங்கள் சங்கத்தில் பதிவு பெற்றுள்ளன. இலங்கையில் மட்டும் பதினைந்து சிற்றிதழ்கள்.




ஒவ்வொரு ஆண்டும் சிற்றிதழ் மேளா நடத்தி வருகிறோம். காரைக்கால், புதுச்சேரி, வேலூர், கோவை போன்ற மாநகரங்களில் உலகத் தமிழ்ச் சிற்றிதழ் மேளா நடத்தப்பட்டுள்ளது. ஐந்தாவது உலகத் தமிழ்ச் சிற்றிதழ் மேளா குற்றாலத்தில் வரும் பிப்ரவரி 21 அன்று நடத்தப்பட உள்ளது!'' என்கிறார் வதிலை பிரபா.

குற்றாலத்தில் இலக்கியச் சாரலா? இனிக்கட்டும் தமிழ்! ○

# செம்பருத்தி நிறத்தினள்!

**ஸ்ரீ லலிதா** 16

நான்காம் பாகம்

சுதா சேஷய்யன்

**அபர்ணா** - புராணக் கதையின்படி ஹிமவான் மகளாகத் தோன்றிய உமா தேவிக்கு அபர்ணா என்று திருநாமம். எது பழுத்து விழுகிறதோ அது பர்ணம். இலை முழுதாகப் பழுத்து விழும். மரத்தோடு தொடர்பு அற்று சருகாகிக் கீழே விழும். தவம் செய்யக்கூடியவர்கள், அந்த மாதிரி, மரத்திலிருந்து பழுத்து விழக்கூடிய இலைகளை மட்டுமே உண்டு தவமிருக்கிறார்கள். இலைகளை அவர்கள் பறிப்பதில்லை.

அம்பிகையோ உமாதேவியாக அவதரிக்கிறபோது பழுத்த இலைகளைக்கூடச் சாப்பிடவில்லை. பர்ணமாக இருக்கக்கூடிய அவற்றைச் சாப்பிடாமல் தவிர்த்தவள் **அபர்ணா** (அ-பர்ணா) என்ற திருநாமம் பெற்றாள்.

**சண்டிகா** - கோபம் நிறைந்தவள். தவறுகள் நடந்தால் அவற்றைத் தட்டிக் கேட்பதற்கான கோபம் நிறைந்தவள்.

**சண்ட முண்டாஸுர நிஷூதினி** - சண்டன், முண்டன் என்ற அரக்கர்களை அழித்தவள்.

**ஸர்வலோகேசி** - ஸர்வலோகத்துக்கும் ஈசுவரியாக இருப்பவள்.

**க்ஷராக்ஷராத்மிகா** - க்ஷரம்- அழியக்கூடியது. அக்ஷரம் அழிவில்லாதது. மாறுதலுக்கு உட்படுகிற அழியக்கூடிய ஜகத் ஸ்வரூபமாகவும் இருப்பவள் அம்பிகை; அதே சமயத்தில், இதையெல்லாம் தாண்டி அழியாத, மாறாத, நிலையான சத்ய ஸ்வரூபமாகவும் இருக்கக்கூடியவள்.

**விச்வதாரிணி** - விச்வத்தை, பூமியை, இவ்வுலகத்தைத் தாங்கக் கூடியவள்.

**த்ரிவர்கதாத்ரி** - த்ரிபுரை என்று ஏற்கெனவே பார்த்திருக்கிறோம். எவையெல்லாம் மூன்று மூன்றாக உள்ளனவோ அந்த வர்க்கங்கள் - மும்மூன்றாக இருக்கக் கூடியவற்றின் ஆதாரமாக இருக்கக்கூடியவள்.

**சுபகா** - சுபகா என்றால் இந்த உலகத்தில் - ஜகத்தில் - எல்லாவற்றுக்கும் சுகத்தைத் தரக்கூடிய ஆதாரமாக இருக்கக்கூடியவள்.

ஏற்கெனவே **பக ஆராத்யா** என்ற ஒரு திருநாமம் பார்த்தோம். சூர்ய மண்டலத்தால் ஆராதிக்கப்படக்கூடியவள் பகாராத்யா.

**சுபகா** என்றால், இந்த ஜகத் பொருட்களிலேயே சுகமாக, நன்மையாக, மென்மையாக இருக்கக்கூடியவள். இந்தப் பொருட்களையெல்லாம் தன்னுடைய இருப்பிடமாகக் கொண்டவள் **சுபகா**.

## முக்குணங்கள்

**த்ரியம்பகா** - முக்கண்களைப் படைத்தவள். சூரியன், சந்திரன், அக்னி - இந்த மூன்றையும் தன் நேத்திரங்களாகக் கொண்டவள் என்பதால் **த்ரியம்பகா**.

**த்ரிகுணாத்மிகா** - ராஜஸ குணம், தாமஸ குணம், ஸத்வ குணம் - இந்த மூன்றுக்கும் ஆதாரமானவள்.

ஆசார்யர் பாடுகிற ஒரு ச்லோகம் ரொம்ப அழகானது.

அம்பாளிடம் இந்த முக்குணங்களும்

உள்ளன என்று சொல்ல வேண்டும். இவற்றில் எது அதிகமாக இருக்கும் என்பதை வைத்துத்தான் ஒரு ஜீவனின் குண இயல்பு அமையும்.

சில பேரிடம் தாமஸம் அதிகமாக இருக்கும்; சிலரிடம் ராஜஸம் கூடுதலாக இருக்கும்; வேறு சிலரிடம் ஸத்வம் அதிகமாக இருக்கும். அம்பாளிடம் இந்த மூன்று குணங்களும் இருக்கின்றன. இதைச் சொல்கிறபோது ஆசார்யர் ஆதிசங்கரர் சொல்கிறார்.

''இந்த மூன்று குணங்களும் வாய்க்கப் பெற்றவர்கள் மூவரும் உன்னிடமிருந்து ஜனித்தவர்கள். அவர்கள் அந்த மும்மூர்த்திகளான பிரம்மா, விஷ்ணு, ருத்ரன்.''

ஸத்வம் இருந்தால்தான் சிருஷ்டி செய்ய முடியும். காப்பாற்றுவதற்கு ராஜஸம் வேண்டும். இதைச் சில சம்பிரதாயங்களில் மாற்றிச் சொல்வார்கள். ஸத்வம் இருந்தால்தான் காப்பாற்ற முடியும்; ராஜஸம் இருந்தால்தான் படைக்க முடியும் என்பர்.

எப்படி இருந்தாலும் இரண்டு குணங்களுமே வேண்டும்.

அழிக்கக்கூடிய ருத்ரனுக்கு, தாமஸன் என்று பெயர். ஆக, ''மும்மூர்த்திகளாக இருக்கக்கூடியவர்கள், அம்பிகையே! உன்னிடமிருந்து தோன்றியவர்கள்தான். அம்மூவருக்கும் முக்குணங்களைப் பிரித்துக் கொடுத்தவள் நீதான்'' என்று பாடினார்.

நாம் இதனை ஏற்கெனவே த்ரிமூர்த்தி என்ற திருநாமத்தில் பார்த்திருக்கிறோம். அவர்களுக்கான குணங்களையும் கொடுத்தவள் அம்பிகை என்கிறது **த்ரிகுணாத்மிகா** என்ற திருநாமம்.

**த்ரியம்பகா, த்ரிகுணாத்மிகா** என்று சொல்கிறபோது ஆசார்யருக்கு அம்பாளுடைய கண்களும் நினைவுக்கு வருகின்றன. த்ரியம்பகா - முக்கண்களுடையவள். அம்பாளுடைய கண்களில் இருக்கக்கூடிய வண்ணங்கள் அவருக்குத் தெரிகின்றன.

என்ன மாதிரி வண்ணங்கள்? கரு விழி. அதில் கறுப்பு நிறம். அடுத்து உள்ள கண்ணின் வெண் பகுதி - வெள்ளை நிறம். அதில் ஓடியிருக்கும் செவ்வரிகள் சிவப்பு நிறம்.

## ஆசார்யரின் விளையாட்டு!

மூன்று குணங்களுக்கும் இதே மூன்று நிறங்கள்தான். ஸத்வ குணத்துக்கு வெண்மை, ராஜஸத்துக்கு சிவப்பு, தாமஸத்துக்குரிய நிறம் கறுப்பு.

இந்த மூன்று வண்ணங்களும் அம்பாளின் நேத்திரங்களில் இருப்பதைச் சொல்லி அவளிடத்தில் முக்குணங்களையும் பார்ப்பதாகச் சொல்லும் ஆதிசங்கரர், அங்கே ஒரு சிறிய விளையாட்டு விளையாடுகிறார்!

**அம்பிகையோ உமாதேவியாக அவதரிக்கிறபோது பழுத்த இலைகளைக்கூடச் சாப்பிடவில்லை**

''அம்மா, உன்னுடைய கண்களில் இருக்கும் வெள்ளை நிறம் ஸத்வம்; சிவப்பு நிறம் ராஜஸம், அம்மா நீ கண்களில் தீட்டிக் கொண்டிருக்கிறாயே, அஞ்சனம்(மை) அது தாமஸத்துக்குரிய கறுப்பு நிறம் படைத்தது!'' என்கிறார்.

அம்பாளிடம் தாமஸ குணம் இருக்கிறது என்று சொல்ல அவருக்கு மனசே வரவில்லை. கருவிழியின் கறுப்பைச் சொன்னால், தாமஸ குணம் அம்பாளுக்கே உரிய நிறமாகிவிடும்! அதனால், அம்பாளின் அவயத்தைச் சொல்லாமல் அவள் அணிந்துள்ள அஞ்சன (மை) நிறத்தைக் குறிப்பிடுகிறார் ஆசார்யர். மை என்பது

வெளியிலிருந்து அவளிடம் போனது தானே! ஆக, முக்கண்ணி, முக்கண்கள் உடையவள் **த்ரியம்பகா.**

**சுத்தா** தூய்மையின் வடிவமாக இருப்பவள்.

**ஜபாபுஷ்பநிபாக்ருதி:** ஜபா புஷ்பம்



என்பது செம்பருத்தி மலர். அதன் காந்தியை தன் திருமேனியில் கொண்டவள் ஸ்ரீ லலிதாம்பிகை. ராஜராஜேஸ்வரியான அவள், செம்மேனி படைத்தவள்.

செம்பருத்தி என்பது, செக்கச் செவே லென்று இருப்பதில்லை. இலேசாக வெளிறிய சிவப்புதான். அந்த ஜபா குஸுமத்தின் அழகிய நிறத்தை உடையவள்.

**ஓஜோவதி** - தேஜஸ் என்பதிலேயே பத்து விதமான தேஜஸ் உண்டு. அதில் எட்டாவது வகைக்கு ஓஜஸ் என்று பெயர். ஓஜஸ் என்றால் பிரகாசம். பிரகாசம் பொருந்தியவள் அம்பிகை.

**த்யுதிதரா** - வானத்தை, தன்னிடத் திலிருந்த காந்தியோடு வழங்கியவள்; காந்தி பொருந்தியவள்.

**யக்ஞரூபா** - யக்ஞங்களின் ஸ்வரூப மாக இருக்கக்கூடியவள்.

## பிரேமை விரதம் பூண்டவள்!

**ப்ரிய வ்ரதா** - பக்தர்களுக்கு நன் மையை, ப்ரீதியை, பிரேமையைத் தருவ தையே தன் விரதமாகக் கொண்டவள். இதற்கு இன்னொரு பொருளும் கொள்ள லாம் - ப்ரியத்தோடு விரதம் இருந்தால் அவ்வாறு இருக்கும் பக்தர்களுக்கு எல்லா வற்றையும் தரக் கூடியவள். விரதங்கள் மீது ப்ரியம் கொண்டவள் என்றும் பொருள் கொள்ளலாம். ஆக மூன்று அர்த்தங்கள் இந்தத் திருநாமத்துக்கு.

**துராதர்ஷா** - ரொம்ப கஷ்டப்பட்டு ஆராதிக்கப்பட வேண்டியவள்; ரொம்ப கஷ்டப்பட்டு தரிசிக்கப்படக் கூடியவள்.

**துராராத்யா** - துர்+ஆராத்யா அல்லது துர+ஆராத்யா என்று இரண்டு விதமாக இதைப் பிரிக்கலாம்.

அம்பிகையைப் பார்ப்பது யாருக்கு ரொம்பவும் கஷ்டம் என்று கேட்டால், பக்தி இல்லாதவர்களுக்கும் அம்பாளைப் பற்றிய தூய்மையான சிந்தனை இல் லாதவர்களுக்கும் அவள் இலேசில் கிடைக்கமாட்டாள். அவள் தரிசனமே மிகவும் கஷ்டம்; கிட்டுவது அரிது.

இதையே ஆசார்யர் வேறு விதமாகச் சொல்கிறார்!

(வளரும்)

# நடக்குமென்பார், நடக்கும்!

31.01.10 முதல்
06.02.10 வரை

தஞ்சை பரத்வாஜ்

**மேஷம்:** வியாபாரம் 'ஓகோ'ன்னு நடந்து பணம் 'கொட்டோ கொட்டு'ன்னு கொட்டும். அதனால கடன் தொல்லை க்ளியராகி, விலகிப் போன சொந்தங்களெல்லாம் ஓடி வரும். ஒரு ஜாலி டூர் கடல் கடந்து போவீங்க. வீடு வாங்க ஏற்பாடு நடக்கும். இது போதுமில்ல?

**ரிஷபம்:** வீடு மாறுவீங்க. கொஞ்சம் வாக்கைக் கட்டுப்படுத்தணும். சண்டை வரலாம். நாக்கையும் கட்டுப்படுத்தணும். உடம்பு சரியில்லாமப் போகும். கூடவே இருந்தவன் காலை வாரி விடுவான் - உஷாராயிருங்க. வண்டியில போறச்ச ரொம்ப ஜாக்கிரதையாயிருங்க.

**மிதுனம்:** நின்னு போன செயல், பணம், பொருள் வீடு தேடி வரும். குட்டை மாதிரி கலங்கியிருந்த மனசு கொஞ்சம் தெளியும். டூவீலர் வாங்குவீங்க-இன்ஸ்டால்மென்ட்டிலாவது! லவ் சக்ஸஸ் ஆகும். அது போதாதா? போதும் போங்க!

**கடகம்:** அட பாருடான்னு எதிரிங்க வியக்கிறமாதிரி புகழ் பாராட்டு வந்து குவியும். வழக்கு உங்களுக்குச் சாதகமாக முடியும். புதுசா ஒரு வேலை தேடி வரும். அதனால இட மாற்றமும் வரும்.

**சிம்மம்:** நோ ப்ராப்ளம்னு ஒற்றை வரியில் சொல்லிடலாம். அந்தளவுக்கு ஒரு தொல்லையுமில்லாத சொகுசான வாரம்.

**கன்னி:** 'உஷாரய்யா உஷாரு! நேரம் காலம் உஷாரு!'ன்னு பாடத்தான் தோணுது. குடும்பத்தில் குழப்பம், தொழிலில் பிரச்னை, வழியில் வாக்குவாதம் - எல்லாம் 'க்யூ' கட்டி வரும்... ஜாக்கிரதை!

**துலாம்:** நினைச்ச காரியம் ஈடேறும். ஒரு மகானைச் சந்திப்பீங்க! புதுசா ஒரு கோயிலுக்குப் போவீங்க! வேலை, வீடு, வாகனம் எல்லாம் மாறும் - புத்தம் புதுசா. இது யோக வாரம்.

**விருச்சிகம்:** நிதானமா இருக்க வேண்டிய நேரம். பாவம் ஒரு பக்கம்; பழி உம் பக்கம் என வந்துவிடாமல் இருங்க ஒய்! நீங்க உண்டு, உங்க வேலையுண்டுன்னு சிவனேன்னு போங்க. இந்த வாரம் முழுக்க மௌன விரதம் இருந்தாக்கூட தேவலை. நாக்குல சனி நர்த்தனமாடுவார் போலும்.

**தனுசு:** கணவன்-மனைவி-குழந்தை-உறவினர்களிடம் ஆழ்ந்த ஆரோக்கியமான நிலவரம் நிலவும். மனக்குழப்பம் நீங்கி சந்தோஷம் பெருக்கெடுக்கும். இட மாற்றம் இனிப்பாக அமையும். நண்பரால் அனுகூலம் ஏற்படும்.

**மகரம்:** மூதாதையர்களின் ஆசியும் இறையருளும் மகான்களின் வாழ்த்தும் உங்களை மகிழ்ச்சியில் திக்குமுக்காட வைக்கும். அனுபவி ராஜா அனுபவி! எல்லாம் இன்பமயம்!

**கும்பம்:** அஷ்டமத்துச் சனியின் ஆதிக்கம் கூடும். எல்லாத்திலேயும் எல்லா நபரிடமும் எல்லா சூழலிலும் ரொம்ப ஜாக்கிரதையா இருங்க. மனசுக்குள்ள பிடிச்ச பகவான் பெயரை உச்சரித்தபடி இருந்தா, தலைக்கு வந்தது தலைப்பாகை யோட போகும்.

**மீனம்:** சுமாரான வாரம். பார்டர் மார்க்குல பாஸாவது போல, ரெண்டுங்கெட்டான் நிலைமை! நவக்கிரக கோயிலுக்குப் போங்க... புதுவழி ஒண்ணு பிறக்கும்.

**2008** ஐ.பி.எல். ஏல நிகழ்ச்சி நடந்தபோது, ''கிரோன் பொலார்டை யாராவது 30 லட்சத்துக்கு வாங்கிக்கொள்கிறீர்களா?'' என்று கூவிக்கூவி விற்கப் பார்த்தது ஐ.பி.எல். ஆனால், ஒருவர்கூட பொலார்டைச் சீந்தவில்லை. 'ம்.. அடுத்த ஆள்' என்று நகர்ந்து போனார்கள். ஐ.பி.எல். அணிகளின் கிரிக்கெட் அறிவு விசாலமாக இல்லாமல் இருந்தது இப்போது சங்கடத்தை ஏற்படுத்தியிருக்கிறது. இன்று, மும்பை அணி பொலார்டை 12.6 கோடிக்கு வாங்கியிருக்கிறது. (ஆனால் இதில் மூணே முக்கால்தான் பொலார்டுக்கு. மிச்சதெல்லாம் ஐ.பி.எல்.லுக்கு). கிரிக்கெட் உலகில் ஒருவருக்கு இத்தனை கோடி சம்பளம் கொடுப்பது இதுவே முதல்தடவை.



அப்படி என்ன இந்த ஒரு வருடத்தில் சாதித்து விட்டார் பொலார்ட்? ஆம். சாதனைதான். சேம்பியன் லீக் போட்டியில் நியூ சவுத்வேல்ஸ் அணிக்கு எதிராக 18 பந்துகளில் 54 ரன்கள் எடுத்தார். அந்த ஓர் ஆட்டம்தான் இன்று கிரிக்கெட் உலகம் அவர் காலடியில் விழுவதற்கு முக்கியக் காரணம்.

''என் முதல் ஏலத்தில் நான் தேர்ந்தெடுக்கப்படாதது பெரிய பிரச்னையே இல்லை. 'அடுத்த வாய்ப்பில் தட்டிவிடலாம்' என்றுதான் காத்திருந்தேன்'' என்று தன்னடக்கமாகப் பேசுகிறார் பொலார்ட். இவர் இதுவரை

மேற்கு இந்தியத் தீவு அணி சார்பாக ஒரு டெஸ்ட் போட்டியிலும் விளையாடவில்லை. மேற்கு இந்தியத் தீவில் நடந்த உலகக்கோப்பைப் போட்டியிலும் சில ஆட்டங்கள்தான் ஆடியிருக்கிறார். சர்வதேச 20-20 போட்டிகளிலும் அவர் சிவப்பு சட்டை அணிந்து வந்திருக்கிறார். சென்ற ஐ.பி.எல். ஏலத்திலும் அவர் பெயர் இடம்பெற்றது. ஆனால், அந்த 54 ரன்கள்தான் பெரிய மேஜிக் காட்டியிருக்கிறது.

இந்த 22 வயதில் கிரிக்கெட்டின் அதிக விலை கொண்ட ஆட்டக்காரராக மாறிவிட்டார் பொலார்ட். மே.இ தீவில் நிலவும் மோசமான கிரிக்கெட் சூழலில் இப்படியொரு நட்சத்திரம் உருவாவதும் முழு வெளிச்சம் அவர்மீது விழுவதும் மே.இ கிரிக்கெட்டுக்குப் பெரிய உத்வேகம் கொடுக்கும். க்ரிஸ் கெய்ல், ப்ரேவோ இருக்கிற ஓர் அணியில் அவர்களைக் கடந்து சென்றிருக்கிறார் பொலார்ட். ஒரே காரணம், பொலார்ட் ஒரு துல்லியமான 20-20 ஸ்பெஷலிஸ்ட். அல்வா வேண்டுமென்றால் இருட்டுக்கடைக்குச் செல்வதுபோல சிக்ஸர்களுக்காக பொலார்டை நோக்கி வந்து பணத்தை வீசி எறிந்திருக்கிறது மும்பை அணி. பொலார்டின் மற்ற பலங்கள், பந்துவீச்சும் ஃபீல்டிங்கும். இதுவரை நடந்த இரண்டு ஐ.பி.எல்.-லிலும் மும்பை அணி அரையிறுதி வரை முன்னேறாததால் எப்பாடுபட்டாவது பொலார்டைப் பெற்று வாருங்கள் என்று அம்பானிக்கு சச்சின் அறிவுரை சொல்லி ஏலத்துக்கு அனுப்பியிருக்கிறார்.

அதிரடி ஆட்டத்தை யாராலும் ஆட முடியும். பொலார்டுக்கு வழங்கப்பட்ட தொகை மிகவும் அதிகம் என்றும் பேச்சு கிளம்பியிருக்கிறது. சச்சின், ஜெயசூர்யாவை விடவும் பொலார்ட் பெரிய ஆளா என்றும் கேள்விகள் எழுகின்றன. இந்த வருட ஐ.பி.எல். இப்போதே களைகட்டிவிட்டது என்று இதிலிருந்து புரிந்துகொள்ள முடிகிறது. நன்றி பொலார்ட்!

ச.ந.கண்ணன்

# பொளந்து கட்டுகிறார் பொலார்ட்!

தமிழ்நாட்டுல இருக்கிற பெரிய கோயில்கள்ல ஒண்ணு மட்டுமில்ல... திண்டுக்கல் மாவட்டத்து லேயே பெரிய கோயில்னு பார்த்தா, அது எங்களோட கோட்டை மாரியம்மன் கோயில்தானுங்க. இந்தக் கோயில்ல திருவிழான்னா, திண்டுக்கல் பூரா திருவிழாக் கோலம் களைகட்டி நிக்கும். சுத்து வட்டார நூத்துப் பதினெட்டுப் பட்டி கிராம சனங்களும், கோட்டை மாரியம்மன் மைதானத்துல சுழண்டு கிடக்கும். சுத்துப்பட்டி மக்க மனுசா எல்லாம் ராப்பகல் பாராது பரவசத்துல மிதக் கும். ஒவ்வொரு மண்டகப் படி திருநாளும் மக்க மன சைக் கொள்ளை கொள்ளும்.

அதுக்கும் முன்னாடி உங்க எல்லாரையும், கோட்டை மாரியம்மன் கோயிலை ஒரு ரவுண்டு



# திண்டுக்கல்லின் சமயபுரம்!




சுட்டிக் காமிக்கறது கைடா வந்திருக்கற சிலுக்குவார்ப்பட்டி சின்னசாமியோட கைங்கர்யம்ங்க.

நீங்க தரிசிக்கிற கோட்டை மாரியம்மன் விக்ரகம், முந்நூறு வருஷ தொன்மையானதுனு சொல்றாங்க. அதனோட கருவறை, அளவுல ரொம்பச் சின்னது. ஆத்தா சொரியும் கருணை ரொம்ப ரொம்பப் பெரிசு. கருவறையில வெளிச்சம் குறைவு. ஆனாலும், கோட்டை மாரியம்மாவோட தெய்விகப் பேரொளி ரொம்ப நிறைவு. ஆவுடையார் பீடத்துல அம்மன் அமர்ந்த நிலையில தரிசனம் தர்றா. சமயபுரம் மாதிரியே, இங்கேயும் அம்மனுக்கு எட்டு திருக்கரங்கள். அந்த எட்டு கைகள்லேயும் உடுக்கை, கத்தி, வேல், மணி, கபாலம், மலர்னு தரிச்சிருக்கா அம்பிகை. பளபளன்னு ஜொலிக்கிற தீட் சண்யமான கண்கள்! இடது காலை மடிச்சு வலது காலை ஊன்றிய திருக்கோலம்! இதை வீராசனக் கோலம்னு சொல் வாங்க.

ஒவ்வொரு வருஷமும் மார்ச் மாதம் 9,10,11 தேதிகள்லயும்

அக்டோபர் மாதம் 2,3,4 ஆகிய தேதிகள்லயும் காலை 6.20லேருந்து 6.40 மணி வரைக்கும் சூரிய ஒளிக்கதிர்கள் மாரியம்மன் சிரசுலேர்ந்து முகம் வரைக்கும் மேலெழும்பி படிவது பார்க்கப் பார்க்கப் பரவசம்ங்க.

அம்மன் சன்னிதிய ஒட்டி முன்பாகம் தெக்கால விநாயகர். வடக்கால மதுரை வீரன். வடகிழக்குல நவக் கிரகங்க. அம்மன் கோயிலுக்குப் பின்பாகம் தெக்கால முனீசுவரன். வடக்கால நம்ம கருப்பண்ணசாமி. ஒரே நேரத்துல பல்லாயிரம் பேரு பளிஞ்சடுகுடு வெளையாடலாம் போல பெரிய மைதானம்ங்க. முன்னொரு காலத்துல இதுவே ரொம்ப ரொம்பப் பரந்த மைதானமா இருந்திருக்கு. கண்மாய், ஏரி, குளங்களையே விட்டு வைக்காத நம்ம ஆளுங்க, இந்தக் கட்டாந்தரை மைதானத்தைக் கண்டுக்காம இருந்திருப் பாங்களா.. என்ன? சும்மா அவங்கவங்க பங்குக்கு அமோகமா ஆக்கிரமிச்சுட்டாங்க. இப்ப நீங்க பார்க்கற மூணே முக்கால் ஏக்கர் காலியிடம்தாங்க மிச்சம். அதையாவது காப்பாத்தி வைக்கலாம்னு காம்பவுண்டு சுவரு கட்டியாச்சு இப்ப.



இதாங்க... கோட்டை மாரியம்மன் கோயிலு. அம்மன் சன்னிதி எதிரே அலங்கார மண்டபம். அங்கே நின்னு கையெடுத்துக் கும்பிட்டீங் கன்னா கொடிமரம், கருவறை யில கோட்டை மாரியம்மன், கோபுரக்கலசம்னு மூணையும் ஒரே நேரத்துல தரிசிக்கலாம்.

மாசி மாதம் பெரிய திரு விழா. நூறு வருஷத்துக்கு முந்தி, இது வெறும் நாலு நாள் திருவிழா. அப்புறம் பத்து நாளாச்சு. அதுக்கும் பிறகு பதி னேழு நாள் ஆச்சு. 1994 லேருந்து வகுப்புவாரியா எல்லா சனங்களுக்கும் பகிர்ந்தளிச்சு, இப்ப முப்பது நாள் திருவிழா. இதுல பதினெட்டு நாளு மண்டகப்படி திருவிழா. அதுல யும் அங்குவிலாஸ் மண்டகப் படிதான் ஹைலைட்டு.

பார்க்க திண்டு கணக்கா இருக்கற மலைக்கோட்டைக்குக் கீழே இருக்கு, கோட்டை மாரி யம்மன் கோயில். அந்த மலைக் கோட்டையிலேருந்துதான் அர சாட்சி பண்ணியிருக்காங்க ராஜாக்கள். முந்நூறு வருஷத் துக்கு முந்தி, ஓலைக்குடிசை கோயில். எதுத்தாப்ல பரந்த வெளி. திப்புசுல்தான் காலத்துல படை வீரர்கள், போர்ப் பயிற்சி பெற்ற மைதானம். தங்களோட காவல் தெய்வமா இந்த மாரியம் மனைத்தான் வணங்கி வந் திருக்காங்க. இப்பவும் நம்ம எல் லாரையும் காபந்து பண்ணி வர்றா. இந்தக் கோட்டை மாரி யம்மாவோட கருணையால உங்ககிட்ட இதையெல்லாம் சொல்லி வந்தது சிலுக்குவார்ப் பட்டி சின்னசாமிங்க. உங்க எல் லோருக்கும் ரொம்ப ரொம்ப ட்டேங்க்ஸ்சுங்க. வரட்டுங் களா...?







"திருக்குறளைச் சிற்பம் செதுக்கணும் ஸார். இந்த எண்ணம்தான் இப்போதைக்கு என்னோட சுத்தியலையும் உளியையும் ஆட்டுவித்துக் கொண்டிருக்கிறது" என்கிறார் திண்டுக்கல் மாவட்டம் மல்லப்பபுரத்தைச் சேர்ந்த சிற்பி கே.வேல்முருகன். 2006 முதல் சென்னை லலித் கலா அகாடமியில் ஃப்ரீலான்ஸ் சிற்பியாகப் பணிபுரிகிறார்.

"ஓர் அத்தியாயத்துக்கு ஒரு சிற்பம்னு. மொத்தம் நூற்று முப்பத்து மூணு சிற்பங்கள் செய்யணும். வேலை ஆரம்பிச்சுட்டேன்







# நானும் கடவுள்தான்!



* கே.வேல்முருகன்

இந்த வருஷக் கடைசியில் காட்சிக்கு வந்துடும்'' என் னும் வேல்முருகன், ''சிற்பி யின் கைப்பட்டதும் கல் கூட கடவுளாக மாறுகிறது. கடவுளுக்குப் பக்கத்தில் இருப்பவர்களில் சிற்பி கள் முதன்மையான வர்கள். ஒரு வகை யில் நாங்களும் கட வுள்தான்'' என் கிறார்.

# பகல் மீன்கள்

குளிரூட்டப்பட்ட அந்தச் சிறிய பிரத்யேக வார்டினுள் பச்சை நிற திரைச் சீலையை விலக்கி சூர்யா நுழைந்ததும், பார்வைக்கு நேர் எதிரே படுக்கையில் தேன்மொழி. சூர்யாவின் மனதில் அவள் அன்று மேட்டுப்பாளையம் ரயில் நிலையத்தில் போட்ட அலறல் சத்தம் எதிரொலித்தது.

சூர்யாவைப் பார்த்ததும் தேன்மொழி சலனமில்லாமல் சிரித்தாள். தொடர்ந்து கண இடைவெளியில் சட்டென வைசாக் சம்பவங்கள் சடசடவென சரிவில் பந்துகள் போல சூர்யாவின் ஞாபகங்களில் உருண்டோடின.

அந்தத் துள்ளல், பதற்றம், படபடப்பு, வெகுளித்தனம், வயதுக்கே உரிய சாதுர்யம் - இவை எதுவுமில்லை. அப்படியே போர்வைக்குள் பனிச்சிகரம் போல அமைதியாக உறைந்துகிடந்தாள். கண்கள் மட்டும் குழந்தையினது போல அப்படி ஒரு மலர்ச்சி! அவளுக்குத் தன் மேல் எந்தக் கோபமும் இல்லை என்பது, அதுவரை அவனுக்குள் அடைபட்டுக் கிடந்த பறவைகளையெல்லாம் பறக்கச் செய்து மகிழ்ச்சியில் தள்ளியது.

ஒரே நொடிக்குள் அந்தச் சிரிப்பும் பார்வையும் அவனுக்குள் இருந்த மனிதத் தன்மைகளை மடமடவென உயர்த்தி, கண்களைக் குளமாக்கி, அவன் தோற்றத்தையே அவுட் ஆஃப் ஃபோகசில் காண்பித்தது. தான் இனியும் அங்கு நிற்பது தவறு என்று உணர்ந்த அருணாச்சலம் சட்டென அறையை விட்டு வெளியேறினார்.

தேன்மொழி அருகில் வரும்படி சூர்யாவை நோக்கிக் கைநீட்டினாள். சூர்யா அருகில் சென்றதும் எதையோ அவள் பேச வர, தொண்டை ஒத்துழைக்க மறுத்து அடம்பிடித்தது. பின் கொஞ்சம் தன்னைக் கட்டுப்படுத்திக்கொண்டவள், அவனது விரல்களோடு தன் விரல்களைக் கோத்துக்கொண்டாள். இருவருக்குள்ளும் தயக்கம், கேள்வி எதுவும் இல்லை.

படுக்கையில் தன்னைக் கொஞ்சம் நகர்த்தி இடம்விட்டு, அங்கு அமரச்



சொன்னாள். பின் மெதுவாக அவன் கண்களைப் பார்த்தவள், ''ஐ லவ் யூ'' என உடைந்த குரலில் சன்னமாகச் சொல்லி அவன் விரல்களை அழுத்தினாள். அடுத்த நொடி அவனும் பதிலைச் சொல்ல வேண்டும். அறிவு புயல்வேகத்தில் சேகரின் அம்மாவுக்கும் கடந்த காலத்துக்கும் ஓடியது. அதே வேகத்தில் உணர்வு அவனை தேன்மொழியின் காதலின் முன் விழ வைத்தது.

''ஐ லவ் யூ டூ'' - இதனைக் கூறி சூர்யா அவளது விரல்களை மேலும் இறுகப் பற்றினான். அவனது கைகளினூடாக உணர்வுகள் அவளது இதயத்துக்குள் காட்டாற்றுப் பெருவெள்ளமாய் வழிந்தோடின. அது அவள் இதயப் பாறையில் அடித்து மோதி அவளையும் திணறச் செய்தது.

தூய அன்பானது தன் முழு சக்தியாலும் இருவரையும் தாக்கியிருந்தது. அந்த நொடியில் அதன் பரிசுத்தமான ஒளியில் இருவரும் கரைந்து நின்றனர். எழுந்து அவனை அப்படியே வாரி அணைத்துக்கொள்ள அவள் மனம் விம்மியது. ஆனாலும் அதனை ஆழமான ஒரு பார்வையால் அவனுக்குள் உணர வைத்தாள். சீறும் கடலலையில் பாறைகளுக்கு இடையே சிக்கிய படகாக அவனும் தடுமாறிப் போயிருந்தான்.

இதுபோன்ற உணர்வு எல்லோருக்கும் வாய்த்துவிடாது. அப்படியே சிலருக்கு வாய்த்தாலும்



17

அஜயன் பாலா

வாழ்வில் என்றோ ஒருமுறைதான். மிகுந்த எழுச்சியுடன் மனம் அந்தரத்தில் காற்றாடியாய் படபடக்கும் இறைத்தன்மைக்கு நிகரான பேரன்பு நிலை அது.

காதலின் தொடக்க காலத்தில் உண்டாகும் இந்தப் பரவச உணர்வின் உச்சம், பின் வாழ்வில் எப்போதும் அவர்களாலேயே உணர முடியாதது. சினிமாவாக இருந்தால் இந்த நேரம் இருவரும் சுவிட்சர்லாந்து புல்வெளிகளில் அல்லது நியூயார்க் நகரவீதிகளில், அவர்களது மனத்தின் மகிழ்ச்சியை உணர்வை விவரிக்க அழைத்துப் போயிருக்கலாம். ஆனால் யதார்த்தத்தில் அவர்கள் எதைப் பேசுவது, எப்படி தங்களது உரையாடலைத் தொடங்குவது என்ற தயக்கத்தில்தான் இருந்தனர். அப்படி தயக்கம் இருந்தபோதும் இருவருக்குள்ளும் ஒருவரையொருவர் நேசிப்பதை அறிந்துகொண்ட மகிழ்ச்சி பூரணமாய் நிரம்பி வழிந்துகொண்டிருந்தது.

"என் கிளாஸ் மக்குப் பையன் ஒருவனுக்கு டியூஷன் எடுத்தது தப்பாயிடுச்சு."

"ஏன் ஸார்?"

"எல்லோரும் என்னை 'மக்கு வாத்தியார்'னு கூப்பிடறாங்களே..."

- ஜி.அப்துல்பாரி, பழனி.



**உ**ண்மையில் இவர்களின் இந்த மகிழ்ச்சிக்கு அருணாச்சலமும் ஒரு காரணம். அவர்தான் சூர்யாவுக்கு முன்பாக தேன்மொழியின் அறைக்குள் வந்து, அவளிடம் சூர்யா வந்திருப்பதையும்... அவனும் அவளைக் காதலிப்பதையும் எடுத்துக்கூறி அவர்களுக்கு இடையில் இருந்த கொஞ்சநஞ்ச புகைமூட்டத்தையும் கலைத்துவிட்டவர். உண்மையில் அருணாச்சலம் செய்தது மகத்தான காரியம். இந்தப் புகைமூட்டம்தான் பலரை ஒன்று சேரவிடாமல், காதலிப்பதை உணர்ந்தாலும் உறுதிப்படுத்திக்கொள்ள வழியில்லாத காரணத்தால் பாதியிலேயே பிரிய வைத்திருக்கிறது.

"அன்னிக்கு வைசாக்ல நீங்க சொன்ன மாதிரியே நாம அட்ரஸ் இல்லாம,போன் இல்லாம இந்த உலகத்துல திரும்ப சந்திச்சுக்கிட்டோம். இட்ஸ் ரியலி சர்ப்ரைஸ்..."

"இப்ப நாம எதுவும் பேசவேணாம். பேச ஆரம்பிச்சா நிறைய்ய பேசணும். இன்னும் டு டேஸ்ல நல்லா நார்மலாயிடுவீங்கன்னு டாக்டர் சொல்லிட்டார். ஜூ டேக் ரெஸ்ட் ஃபர்ஸ்ட்."

சிறிதுநேரம் அப்படியே அமைதியாக இருந்தவள், பின் அருகிலிருந்த தனது கைப்பையை எடுக்கச் சொல்லி சைகை செய்ய, சூர்யா அதை எடுத்து அவளிடம் தந்தான். அதனைத் திறந்த தேன்மொழி, அதிலிருந்து ஒரு கைக்குட்டையால் பொதிந்த மூட்டையை எடுக்க, சூர்யாவும் அதனை ஆச்சர்யத்துடன் பார்த்தான்.

"இது என்ன தெரியுதா...?"

"தெரியலையே..."

"அன்னிக்கு வைசாக் ஸ்டேஷன்ல எனக்கு நீங்க கடனா கொடுத்து ஹெல்ப் பண்ண தொகை. நான் உங்ககிட்ட இதை மணியார்டர் பண்ண அட்ரஸ் கேட்டப்ப நீங்கதானே சொன்னீங்க... இதை ஒரு கர்சீப்ல மூட்டைகட்டி வையுங்க... என்னைக்காவது நாம மீட் பண்ணா வாங்கிக்கறதா சொன்னீங்க..."

''ம்ம்''

சூர்யாவுக்கு ஒருவகையில் ஆச்சர்யமாகவும், இன்னொரு பக்கம் வாங்கிக் கொள்ள சங்கடமாகவும் இருந்தது. எப்படி அதனை நிராகரிப்பது என ஒருநிமிடம் யோசித்தான்.

''இதை உங்ககிட்ட கொடுக்க எனக்கும் இஷ்டமில்ல... ஆனால் என்னடா இந்தப் பொண்ணுக்கு ஹெல்ப் பண்ணினோம். அதான் அப்பவே மறந்துடுச்சு போலன்னு நெனச்சிக்கக்கூடாதுல்ல... அதனாலதான். ஒரு எதிக்ஸ¬க்காகவாவது உங்ககிட்ட இதைக் கொடுக்கணும்னு தோணுச்சு. ஆனா...... இப்ப எனக்கு இதைக் கொடுக்க இஷ்டமில்ல...''

அவள் இப்படி வெளிப்படையாகப் பேசியது, சூர்யாவுக்கு அவள் மீதான காதலை இன்னும் அதிகப்படுத்தியது.

''நான் இதை அப்படியே என்னோட வைச்சுக்குவேன்... என்னை உங்களுக்கு அறிமுகப்படுத்தின அந்தச் சம்பவத்தோட அடையாளமா இது என்கூட எப்பவும் இருக்கட்டும்.''

சூர்யா பதிலுக்கு தன் கையைப் பற்றிக் கொண்டிருந்த அவளது கையை இன்னொரு கையால் பற்றி அழுத்தி, ஆறுதலையும் நம்பிக்கையையும் வெளிப்படுத்தினான்.

''பேசினா நிறைய பேசணும். அன்னைக்கு உன்னை முதல்முறையா பாத்தப்ப... அந்தப் பாட்டு...சேச்சே இப்ப நான் உங்கிட்ட எதுவும் பேசப்போறதில்ல. உடம்பு சரியாகட்டும்.''

'சிட்டுக்குருவி முத்தம் கொடுத்து' தேன்மொழி சன்னமாய் ஹம் பண்ணினாள்.

பொறுமை காக்கச் சொல்லி குறிப்புணர்த்தும் விதமாக அவள் கைகளை மீண்டும் அழுத்தினான்.

''டேக் ரெஸ்ட்.''

அவள் ஆழமாக அவனைப் பார்க்க... சூர்யா அவளிடம், ''இன்னும் அறுபது



**சூர்யாவுக்கு உள் மனசில் அலாரம் அடிக்க ஆரம்பித்தது. உளறிவிடுவோமோ என அச்சப்பட்டான்!**

எழுபது வருஷம் இருக்கு ...வி கேன் ஸ்பீக் லாட்.''

''அதெப்படி சொல்லமுடியும் நாளைக்கே நான் செத்துட்டா..?''

''அப்ப உன் கையால அடிவாங்கற பாக்கியம் எனக்கு இல்லைன்னு சொல்ற''

அவளுக்குச் சட்டென சிரிப்பு வந்துவிட்டது.

சூர்யாவுக்கு உள் மனசு அலாரமடித்தது. பேச்சை நீட்டினால், எதையாவது உளறிவிடுவோமோ என அச்சப்பட்டான்.

''வெயிட்...வெயிட்... ம்ம்ம் உங்ககிட்ட ஏதோ கேக்க நெனச்சேன். ம்ம்ம்...''

''சரி யோசிச்சு வை நாளைக்கு வந்து கேட்டுக்கறேன்.''

''நோ நோ வெயிட்...''

அவள் யோசிக்க,

''சீக்கிரம்.''

அவளது கேள்வி, சூர்யாவை ஆச்சர்யப்படுத்தியது.

**(மீன்கள் துள்ளும்)**



# வெல்கம் டு பிரியாணி சிட்டி!



திண்டுக்கல் பூட்டுக்கும், பூக்களுக்கும் பெயர்போன மாவட்டம். ஆனால், நகரத்துக்குள் ஆங்காங்கே வைக்கப்பட்டிருந்த விளம்பர பேனர்களில் 'வெல்கம் டு பிரியாணி சிட்டி' என்று குறிப்பிடப்பட்டிருந்தது நமக்கு ஆவலைத் தூண்டி விட்டது. அதை மேலும் தூண்டும் வகையில் சொன்னார் திண்டுக்கல் பொன்ராம் பிரியாணி கடைகளின் உரிமையாளர் ராமச்சந்திரன். ''ஸார் ஒரு நாளைக்கு மட்டும் திண்டுக்கல்ல ரெண்டு லட்சம் ரூபாய்க்கு மேல பிரியாணி விற்குது. இது கடைகள்ல மட்டும்தான்... அது தவிர ஹோம் டெலிவரி, பார்ட்டி ஆர்டர்னு நிறைய இருக்கு''ன்னு நம்மை ஆச்சர்யப் படுத்தினார்.





ராமச்சந்திரன்

பொன்ராம் பிரியாணி கடை கிட்டத்தட்ட மூன்று தலைமுறைகளைத் தாண்டியும் வெற்றி நடை போட்டுக் கொண்டிருக்கிறது. திண்டுக்கல்லில் மட்டும் நூற்றுக்கும் அதிகமான பிரியாணி கடைகள் இயங்கி வருகின்றன. அவற்றில் இருபத்தைந்து ஆண்டுகளைத் தாண்டி வெற்றிகரமாக இயங்கி வருபவை பொன்ராம்




பிரியாணி கடைகளைப் போல வெகு சிலதான். அவையே சுவைக்குப் பெயர் போனவை. பொதுவாகவே திண்டுக்கல்லுக்கும் பிரியாணிக்கும் ஏகப் பொருத்தம். எதனால்? ராமச்சந்திரனிடமே கேட்டோம்.

"திண்டுக்கல்லைச் சுத்தி இருக்கற தட்ப வெப்பம்தான் ஸார் காரணம். ஆத்தூர் அணையிலேருந்து கிடைக்கற தண்ணீர் மிக முக்கியக் காரணம். மிக்ஸி, கிரைண்டர், என அரவை இயந்திரம் இருந்தாலும், பிரியாணி தயாரிக்க தேவையான மசாலா, பட்டை, கிராம்பு ஆகியவற்றை உரலில் இடிச்சுத்தான் பயன்படுத்துகிறோம். ஆத்தூர் அணை தண்ணீல விளையற சீரகச் சம்பா அரிசியைத்தான் பிரியாணிக்குப் பயன்படுத்தணும். எல்லாத்துக்கும் மேல, பிரியாணியை விறகு அடுப்புமூட்டி செஞ்சாதான் பக்குவமா இருக்கும். நாங்களும் எவ்வளவோ தடவை மத்த அடுப்புகள்ல செஞ்சு பார்த்துட்டோம். ஆனா, விறகு அடுப்பு மூட்டி செஞ்ச பிரியாணி சுவையை அடிச்சுக்கவே முடியாது" என்கிறார் ராமச்சந்திரன்.

"எங்க பிரியாணி வெளிநாடுகள் வரை போகுது. காரணம், பிரிக்காமல் இருந்தால் இருபது மணி நேரம் வரை கெட்டுப் போகாமல் இருக்கும். ட்ரெயின்ல வர்றவங்க திண்டுக்கல் ஸ்டேஷன் வர்றதுக்கு அரை மணி நேரத்துக்கு முன்னாடியே எங்களுக்கு ஃபோன் பண்ணி, வண்டி நம்பர், கோச் நம்பர், எல்லாம் சொல்லிடுவாங்க. நாங்க ஸ்டேஷன்ல போய் பிரியாணி டெலிவரி பண்றோம். வெளிநாட்டுக்காரங்க ரொம்பவே விரும்பிச் சாப்பிடுறாங்க" என்கிறார்.

பொன்ராம் பிரியாணி கடையோட ஸ்பெஷல் என்ன என்று கேட்டால், அடுக்குகிறார். நமக்கு நாக்கு ஊறத் துவங்குகிறது.

"முட்டைக்கறி, தலைக்கறி, தயிர்ச் சட்னி, நாட்டுக்கோழி ஃப்ரை, சைனீஸ், தந்தூரி..."

## ஹிஸ்டரி ஆஃப் பிரியாணி

இந்தியாவில் 1800லிருந்து 1900க்கு இடைப்பட்ட காலத்தில்தான் பிரியாணி புகழ்பெறத் தொடங்கியது. மொகலாயர் காலத்தில் லக்னோவில் ஆவுதி பிரியாணி படு ஃபேமஸ். 1856ல் கல்கத்தாவை ஆண்ட நவாப்வாஜித் மன்னர், கொல்கத்தா பிரியாணி, ஹைதராபாத் பிரியாணியை புகழ்பெறச் செய்தார். மன்னர்களின் அரசவை உணவாகவும் விளங்கிய பிரியாணி, பெர்சியா நாட்டிலிருந்து, ஆப்கானிஸ்தான் வழியாகவும், கேரளாவின் கோழிக்கோடு வழியாகவும் இந்தியாவுக்குள் நுழைந்திருக்கிறது.

# தியானம் தீர்வாகுமா?

தியானத்தை மனத்துக்கான பயிற்சியாகவும், பல்வேறு யோகாசனங்களை உடலுக்கான பயிற்சியாகவும் சித்தர்களும் யோகிகளும் செய்து வந்திருக்கிறார்கள். ஆனால், இன்றைய மருத்துவ விஞ்ஞானப்படி 'மனம் என்பது மூளையின் வேலை' என்றாகிவிட்ட நிலையில் மனமும் உடலின் ஓர் அங்கம்தானே?

உடலும் மனமும் ஒன்றோடொன்று தொடர்புடையவை மட்டுமின்றி ஒன்றின் தாக்கம் மற்றொன்றில் பிரதிபலிப்பதை நம்மால் உணர முடிகிறது.

நெற்றி வியர்வை நிலத்தில் சிந்த தினமும் கடுமையாக உழைக்கும் விவசாயியும், பயிற்சியையே வாழ்க்கையாகக் கொண்ட விளையாட்டு வீரர்களும் தங்களின் வேலைகளை முழுஈடுபாட்டுடன் செய்யும்போது அதுவே உடலுக்கும், மனத்துக்குமான பயிற்சியாகிறது.

உடலில் காய்ச்சல் வந்து மூன்று நாட்கள் படுத்த படுக்கையாகக் கிடக்கிறோம். பின்பு சரியாகி அன்றாடக் கடமைகளைச் செய்யத் தொடங்கும்போது மனத்தில் ஓர் உற்சாகமின்மையும், முனைப்பின்மையும் தென்படுவதை நம்மால் உணரமுடியுமல்லவா?

அதேபோல மனத்துக்குக் கவலையையும், சோர்வையும், பயத்தையும் உண்டாக்கும் இழப்போ பிரச்னையோ ஏற்படும்போது அதன் விளைவாக எனர்ஜி வடிந்து உடலும் அசதியாக உணர்கிறது.

இப்படி உடலும் மனமும் இரு வேறு வஸ்துக்கள் அல்ல. இரண்டும் ஒன்றோடொன்று தொடர்பில் உள்ளவை. உடல் என்பது ஓர் அமைப்பு (structure). மனம் என்பது ஓர் இயக்கம் (function). குறிப்பிட்டு சொல்லப்போனால் உடலில் மூளை என்ற அமைப்பின் இயக்கம்தான் மனம்.

இதயம் இரத்த ஓட்டம் எனும் வேலையையும், சிறுநீரகங்கள் கழிவு நீக்கம் என்ற வேலையையும், நுரையீரல்கள் சுவாசம் எனும் வேலையையும், குடல் செரிமானம் எனும் வேலையையும் மற்றும் கண்களும், காதுகளும் முறையே பார்வை, கேட்டல் என்ற செயல்களையும் செய்வது போல.

நம் உடல் அங்கங்களில் ஏதேனும் ஒன்றின் வேலை பாதிக்கப்படும்போது அது மற்ற அங்கங்களின் வேலையையும் பாதிக்க வாய்ப்பிருக்கிறது.

உதாரணமாக இதயத்தின் வேலையாகிய இரத்த ஓட்டம் சரியாக இல்லாத பட்சத்தில் சிறுநீரகங்களுக்கும், நுரையீரல்களுக்கும், கண்களுக்கும் போதுமான இரத்த ஓட்டம் கிடைக்காது. அப்போது அவற்றின் வேலைகளும் பாதிக்கப்படும்தானே?

சிறுநீரகங்கள் சரியாக கழிவுநீக்கம் செய்யமுடியாமல் யூரியா போன்ற நச்சுக்கள் இரத்தத்திலேயே தங்கிவிடுவதால் டயாலைசிஸ் போன்ற சிகிச்சைகள் தேவைப்படுகிறதல்லவா? டயாலைசிஸ் செய்யாமல் நச்சுக்கள் கலந்த இரத்தத்தை இதயம் உடலின் பாகங்களுக்குச் செலுத்தினால் அதன் பாதிப்பு அந்த பாகங்களிலும் பிரதிபலிக்கும்தானே?




உடலின் எல்லா பாகங்களும் சீராக இயங்குவதில்லை.

ஐந்து மணிநேரம் நாற்காலியில் உட்கார்ந்துவிட்டு எழுந்து கைகளைத் தலைக்கு மேலே தூக்கி கோத்து, உடலை வளைத்து 'அப்பாடா!' என முறிக்கும்போது, நம் உடல் கடந்த ஐந்து மணி நேரமாக ஒன்றோடொன்று இணைந்து ஒழுங்காக சீராக இயங்காததன் விளைவு கால்கள் மரத்துப் போனதாக, உடல் வலியாக, மூட்டுகளில் நெட்டியாக, கொட்டாவியாக வெளிப்படுகிறது.

இருபதாண்டுகள் ஒரு குமாஸ்தா காலை ஒன்பதிலிருந்து மாலை ஐந்து மணிவரை இப்படி நாற்காலியிலேயே உட்கார்ந்திருந்து வேலை செய்தாரேயானால் என்னவாகும்?

எனவே, இவருக்கு தினமும் யோகாவும், தியானமும் செய்வது கொஞ்ச நேரமாவது உடலின் இயக்கத்தைச் சீரமைத்து அது நாள்முழுக்க நடக்க விருக்கும் சீரற்ற உடலியக்கத்தைச் சமன் செய்கிறது. ஆனால், விவசாயி மற்றும் விளையாட்டு வீரனுக்கு உடல் இயக்கமே வேலையாக இருக்கும்பட்சத்தில் யோகாவும், தியானமும் தேவைப்படுவ

இப்படியான பாதிப்புகள் ஏற்படாமல், உடலின் ஒவ்வொரு பாகமும் அமைப்பிலும், செயலிலும் ஒன்றோடொன்று ஒத்துழைத்து ஒருங்கிணைந்து செயல்படுவதால்தான் மனிதன் நடமாடுகிறான். இந்த உடலையும், மனத்தையும் சீராகச் செயல்படச் செய்யும் பயற்சிகளே யோகாவும், தியானமும்.

தினமும் காலை 9 மணியிலிருந்து மாலை 5 மணிவரை நாற்காலியிலே உட்கார்ந்து கணக்கெழுதும் குமாஸ்தாவுக்கு

டாக்டர் பி.ஆனந்தன்

தில்லை.

அப்புறம் ஏன் யோகிகளும், சித்தர்களும் செய்து வந்தார்கள்?

அவர்களின் வேலை கடவுளை, உண்மையை, மெய்ஞானத்தை அறிவதாகவே இருந்ததால் உணவுக்காக உழைக்காமல் கிடைத்ததை உண்டு, மற்றவர்கள் கொடுத்ததைப் பெற்று மற்ற நேரங்களில் தேடலே வாழ்க்கையாகக் கொண்டனர்.

அதுவும் அலைந்து திரிந்து தேடிய தேடல் இல்லை. உள்ளுக்குள்ளேயே தேடினார்கள்.

எத்தனை பேருக்குத் தேடியது கிடைத்தது என்பது ஒருபுறம் இருந்தாலும் அப்படித் தேடும்போது சித்தர்களின் உடல் மற்றும் மன இயக்கங்கள் சீரற்று பிரமை ஏற்பட்டுவிடாமல் இருக்கத்தான் தியானத்தையும், யோகாவையும் செய்து வந்தார்கள்.

அதையும் மீறி சித்தபிரமை பிடித்தவர்களையே பைத்தியக்காரர்களென முன்னோர்கள் அழைத்தார்கள்.

ஆனால், சித்த பிரமை பிடித்தவருக்கு தியானமும், யோகாவும் பயனளித்ததாகப் புராணங்களோ, இதிகாசங்களோ சொல்லவில்லை. பிடிக்காமல் இருக்க உதவியிருக்கலாம். சித்த மருத்துவத்தில், சித்த பிரமை பிடித்தவருக்கு பேரண்டபஷ்பம் என்ற மூலிகையை கழுதைப் பாலில் கலந்து குடிக்கச் சொன்னார்களே தவிர, தியானம் செய்யச் சொல்லவில்லை.

ஆனால், இன்றைக்கு தியானமும், யோகாவும் ஃபேஷனாக மாறி 'சர்வ ரோக நிவாரணி' என்ற விதத்தில் நவீன குருஜிக்களால் மார்க்கெட்டிங் செய்யப்படுகின்றன.

'சித்தர்களாகிய(!)' இந்த குருஜிக்கள் தியானத்துக்கும், யோகாவுக்கும் அறிவியல் முலாம் பூசி அப்பாவி ஜனங்களை அடிமைப்படுத்தும் போக்கு ஆபத்தானது.



**வா**சகர்களே! புரிந்து கொள்ளுங்கள். மனநலம், உடல்நலம் காக்க யோகாவும், தியானமும் பயன்படலாம். ஆனால் உடலிலும், மனத்திலும் நோய் ஏற்பட்டால் சிகிச்சைதான் பயன்படும். மாறாக, யோகாவும் தியானமும் மட்டுமே செய்தால், பிரச்னையை அதிகப்படுத்தும்.

(இன்னும் அலசுவோம்)




# ஸ்ரீராம் பாரதி கலை இலக்கியக் கழகம்

(ஸ்ரீராம் நிறுவனங்களின் அங்கம்) சென்னை நடத்தும்

## மகாகவி பாரதியார் 128ஆவது பிறந்தநாள் விழா



மாண்புமிகு டாக்டர். **எஸ்.ஜெகத்ரட்சகன்** (தகவல் ஒலிபரப்புத்துறை மத்திய இணையமைச்சர்) தலைமை வகித்து, பேச்சுப் போட்டியில் வென்ற மாணவர் – மாணவிகளுக்குப் பரிசுகளும், சான்றிதழ்களும் அளித்து, **அமரர் கொத்தமங்கலம் சுப்பு** எழுதிய **பாட்டிலே பாரதி** – நூலை வெளியிட்டு தலைமையுரை நிகழ்த்துவார்.

**டாக்டர் திரிசக்தி சுந்தர்ராமன்**
தலைவர், திரிசக்தி குழுமம், நூலின் முதல் பிரதியைப் பெற்றுக்கொள்வார்

உயர்திரு. **என்.முரளி** (நிர்வாக இயக்குனர், 'தி ஹிண்டு' நாளிதழ்)
தலைவர், சென்னை சங்கீத வித்வத் சபை (மியூசிக் அகாடமி)
சிறப்பு விருந்தினராகக் கலந்துக் கொண்டு, பாரதி புகழ் பரப்பிவரும் அறிஞர் பெருமக்கள் மூவர்க்கு விருது வழங்கிப் பொற்கிழி அளித்து பொன்னாடை அணிவித்துப் பாராட்டிச் சிறப்பிப்பார்.

திருமதி **டாக்டர் சுதா சேஷய்யன்** (பதிவாளர், டாக்டர் எம்.ஜி.ஆர்., மருத்துவப் பல்கலைக்கழகம்)
**''பாஞ்சாலி சபதம்''** எனும் தலைப்பில் சிறப்புச் சொற்பொழிவாற்றுவார்

குறிப்பு: விழாவுக்கு வருபவர்களுக்கு அமரர் கொத்தமங்கலம் சுப்பு எழுதிய ''பாட்டிலே பாரதி'' எனும் நூல் அன்பளிப்பாக வழங்கப்படும்.

***இடம்:*** ஸ்ரீகிருஷ்ணகான சபா ***நாள்:*** 6.2.2010 ***நேரம்:*** மாலை 5 மணி

*அனைவரும் வருக!*

# உயிரிழந்த

நடைபாதை வீடுகள், வழிந்தோடும் சாக்கடை வீதிகள், கழிப்பிட வசதியின்றி அல்லாடும் சென்னை ரோட்டோர வாசிகளின் கைங்கர்யம் என சீர்கெட்டு வரும் சென்னையைச் சிங்காரிக்க அரசு பல முயற்சிகளை எடுத்து வருகிறது. அவற்றின் இன்றைய நிலைமையைக் காணப் புறப்பட்டோம். மினி மெட்ராஸ் விசிட்டில் புலப்பட்டவை:

‘‘சாலைகளைப் பிரிக்க நடுவில் உள்ள மீடியன்களிலும் சாலைச் சந்திப்புகளில் உள்ள டிராஃபிக் ஐலேண்டுகளிலும் செடிகள். சபாஷ்! பசுமையைக் கூட்டி, தூசுக் காற்றையும் வடிக்கட்டும். ஆனால், செடிகள் வைத்தால் போதுமா? அவற்றைப் பராமரிக்க வேண்டாமா? ஆழ்வார்பேட்டை ஜங்ஷனில் செடிகள் வாடிக் காய்ந்து, குப்பைமேடாகக் காட்சி அளிக்கிறது. இதைவிடக் கட்டாந்தரையே பரவாயில்லை!

மற்றொரு சிங்கார முயற்சி, சுவர்களில் சித்திரங்கள். மந்தைவெளியில் நீண்ட பலகைகளில் மீன் வகைகளின் ஓவியங்கள். இதே அடையாறு க்ரீக் பூங்காவின் மறுபுறச் சுவர்களில் (அண்ணாமலைபுரம் - க்ரீன்வேஸ் சாலை) பலவிதமான மிருகங்களும் பறவைகளும் உயிருடன் இருப்பவை போன்று தத்ரூபமாய் நம்மைக் கவர்ந்தன. ஆனால், அவை கவரிங் நகைகள் போன்று மெல்ல மெல்ல வெளுக்கத் துவங்கிவிட்டன. அண்ணா சாலையில் நந்தனம் சுவர்களில் உள்ள ஓவியங்கள் சில மாதங்களிலேயே ஆயில் பெயின்ட் உரிந்து பல்லை இளிக்கின்றன. இப் பகுதியில் மட்டும் ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாதபடி ஓவியக் காட்சிகள். பதுங்கும் புலி, அதையடுத்து சூரியகாந்திப் பூக்கள், மாமல்லபுரக் காட்சிகள், அதை வேடிக்கை பார்த்துக்கொண்டிருக்கும் வெளிநாட்டுப் பயணிகள்,



# ஓவியங்கள்!

கன்னியாகுமரி, அதை அடுத்து தேயிலை பறித்துக்கொண்டிருக்கும் பெண். என்ன தொடர்பு இவற்றுக்குள்? நமது வாழ்வின் உன்னதத்தை, கலைகளின் பிரதிபலிப்பை, நமக்கும் ஓவியத்துக்குமான உறவைச் சொல்லும்படி ஏதேனும் இருக்க வேண்டாமா? இது இடம் நிரப்பும் வேலையில்லையே! வினைல் பானர்கள் வந்தபின் பானர் எழுதும் கலைஞர்களுக்குப் பிழைப்புக்கு வழியில்லை என்பது உண்மை. சுவர்களில் சித்திரம் தீட்டுவதால் அவர்களுக்கு வேலை வாய்ப்பு கிடைக்கிறது என்பதும் உண்மை. அவர்களுக்குச் சரியானபடி விஷயங்களையும் தரமான வண்ணக் கலவையையும் கொடுத்து வரையச் சொல்லலாமே! 200-300 ஆண்டுகளுக்கு முன்பு தீட்டப்பட்ட ஓவியங்கள் சில இன்னும் நம் கோயில்களில் நிறம் மாறாமல் ஒளிர்கின்றன. ஆனால், சென்னையை அழகுபடுத்த வரைந்த படங்களின் நிலை பரிதாபம்தான். சித்திரம் தீட்டப்பட்ட சுவர்களின் முன்னால் சிறுநீர் கழிப்பது நிற்கவில்லை.

சில பிரபலமான ஓவியர்களையும், மேலும் சில இளைய கலைஞர்களையும் வைத்து ராஜீவ்காந்தி சாலையில் சுவர்களில் சில ஆண்டுகளுக்கு முன் சித்திரங்கள் தீட்டப்பட்டன. அதற்குப் பல லட்ச ரூபாய் செலவானது. ஆனால், இன்று அவற்றின் நிலை என்ன? அவற்றைப் பராமரிப்பது பற்றி யாராவது யோசித்தார்களா? இம்முயற்சிகள் நகரை அழகுபடுத்துகின்றனவா? ஆயுசு குறைவான இந்த அழகுத் திட்டத்தால் சென்னை சிங்காரமாகாமல் சிங்கோரமாகியிருப்பதை இனியாவது கவனிக்க வேண்டும்.'' ●

**லக்ஷ்மி வெங்கட்ராமன்**

திருப்பதின்னா லட்டு. திண்டுக்கல்னா பூட்டு. இந்தியாவிலேயே பூட்டு தயாரிப்புல முன்னணியில இருந்த நகரம். இன்னைக்கு ரொம்பவே பின்தங்கிப் போச்சு. இது தொடர்பான பல தொழிலகங்கள், அங்கேயே தயாரான பூட்டுக் களாலேயே பூட்டப் பட்டு முடங்கிக் கிடப் பதுதான் பரிதாபம்!

குடைபாறைப்பட்டி, சந்தைப்பேட்டை, வேடப் பட்டி, நாகல் நகர் பாரதிபுரம், குள்ளனம்பட்டி சாஸ்திரி நகர் - இந்தப்





* ராமையன்

# பூட்டுக்குப் போட்

பகுதிகளில், பூட்டிக் கிடந்த பல பட்டறைகள், தொழிலகங்களிடையே இன்னும் எஞ்சியுள்ள சிலவற்றில் ஒரு வலம் வந்தோம்.

"சின்ன லெவல்ல பூட்டு உற்பத்தி பண்றதை பட்ட றைன்னு சொல்வாங்க. பெரிய லெவல்ல தயாரிக்கறதை கம்பெனிம்பாங்க. இந்த ரெண்டு வகை யுமே திண்டுக்கல்ல எண் ணிக்கை அதிகமா இருந்திச்சு ஒருகாலத் துல. இப்ப அதுல பாதிக் குப் பாதிதான் தேறும்.




கரெக்டா சொல்லணும்னா அலிகார் பூட்டுகள் தமிழ்நாட் டுல எட்டிப் பார்த்ததுக்கப் புறம்தான் திண்டுக்கல் பூட்டு விற்பனை சரிய ஆரம்பிச்சுது. என்னதான் ஆயிரம் மாடல்கள்ல அலிகார் பூட்டு அணிவகுத்து நின்னாலும், திண்டுக்கல்



பூட்டுக்கு ஈடாகாது. அதோட அமைப்பும், தரமும், பாதுகாப்பும் வலுவானது. கொண்டி பூட்டு - இதுதான் திண்டுக்கல் பூட்டு. கள்ளத்தனமா யாரும் கம்பி போட்டு நெம்பித் திறக்க முடியாது.

# ட்டு!

பூட்டையே ரெண்டா உடைச்சாத்தான் உண்டு. இந்தத் தரமும், வேலை நுணுக்கமும்தான் திண்டுக்கல் பூட்டுத் தொழிலை இப்பவும் காப்பாத்தி வருது!'' எனக் கூறுகிறார் திண்டுக்கல் மாவட்ட அனைத்து பூட்டுத் தயாரிப்பாளர்கள் முன்னேற்ற சங்கத் தலைவர் ஆர்.கே. முருகன்.

''மெயின் டோருக்கான பூட்டு பித்தளையில பண்றோம். ஸ்டீல்ல பண்றோம். அலமாரி பூட்டு, டிராயர் பூட்டு எல்லாம் பண்ணித் தர்றோம். பத்து வருஷத்துக்கு முன்னாடி திண்டுக்கல் பகுதியில மூவாயிரம் பேர் இந்த வேலை செஞ்சு வந்தாங்க. இப்ப ஐந்நூறு பேரு தேறுவாங்களாங்கறதே சந்தேகம். தொழில் நசுங்கிப் போச்சு. இதனால் தொழிலாளிங்க வேற வேலை தேடிப் போயிட்டாங்க. கடைசி வரைக்கும் இதே வேலை செஞ்சுட்டு சாகற ஒரு தொழிலாளி, தன்னோட குடும்பத்துக்கு ஐம்பது அறுபதாயிரம் ரூபா கடனை வெச்சுட்டுத்தான் செத்துப் போறான்,'' என்கிறார் முப்பத்தைந்து வருடங்களாக இயங்கி வரும் பூட்டுத் தொழிலாளி ராமையன்.



* ஆர்.கே. முருகன்



* சரவணன்

**வீ**டுகள்ல பாதுகாப்புக்கு வெச்சுக்க குட்டியூண்டு சேஃப்டி லாக்கர் முதல், நிறுவனங்கள் மற்றும் நகை அடகுக் கடைகளில் வைத்துக்கொள்ள பெரிய சைஸ் சேஃப் லாக்கர்கள் வரை இங்கு தயார் ஆகின்றன. ''அயர்ன் சேஃப் பாக்ஸ் லாக்கர்னு பேரு. ஒன்னரை அடி உயரத்துலேருந்து மூணடி உயரம் வரைக்கும் இதுகளை வீட்டு உபயோகத்துக்குச் செஞ்சு தர்றோம். நிறுவனங்கள், நகை அடகுக் கடைகளுக்கு லாக்கர் பீரோ செஞ்சுதர்றோம். அஞ்சு அடி, ஆறடி உயர பீரோ. ஐந்நூறு கிலோ எடை முதல் ஆயிரம் கிலோ எடை வரை இருக்கு. சின்ன லாக்கர்னா நாலு சாவி. பெருசுனா ஆறு சாவி. பேங்க் லாக்கர்னா பத்து சாவி. எல்லாமே கை வேலைப்பாடுதான். பணம், நகை மற்றும் ஆபரணங்கள் பாதுகாப்பாகப் பூட்டி வைத்துக் கொள்ள இதுபோல பீரோ லாக்கர்கள் தயாரிப்பு திண்டுக்கல்லில் மட்டுமே சிறப்பாகச் செய்யப்பட்டு வருகிறது!'' எனச் சொல்கிறார் இத்தொழிலில் மூன்றாவது தலைமுறையாக இயங்கி வரும் என்.சரவணன். ●

சிரிப்பழகு

# என் செல்ல இஞ்சி மொளகா...

லதா சேகர்

பல இடங்களில் குழந்தையைக் கொஞ்சுகிற சாக்கில் இடக்கு, கோபம், எரிச்சல் எல்லாம் வெளி வரும். ''எங்காத்து மகாலட்சுமி, ஜெயலட்சுமி, சுப்புலட்சுமி, ராஜ லட்சுமி, வரலட்சுமி, நாகலட்சுமி... மி...மி...'' என ஒரு பாட்டி தன் பேத்தி 'சுமி'யைக் கொஞ்சுவாள். இத்தனை அம்சமான லட்சுமிகளை விட்டுவிட்டு கடைசி இரண்டு அட்சரங்களை மட்டுமே வைத்ததில் மருமகள் மீது செம கடுப்பு!

ப்ளட் பிரஷர், கொலஸ்ட்ரால்... என்று ஊறுகாய்களைப் போடாமல் வைத்த மனைவி, மருமகளிடம் பழி தீர்க்கவே ஒரு தாத்தா தன் பேரனை, ''என் குட்டி நார்த்தங்காய்', 'இஞ்சி மொளகா', வேப்பலக்கட்டி', 'சின்னு சின்னு மாவடு...'' என்று காரசாரமாகக் கொஞ்சுவார்.

சில தகப்பனார்கள் தங்கள் குழந்தையை படவா, ராஸ்கல், திருடா, திருட்டு முழி, மற்றும் இன்னபிற வாயில் வரக் கூசும் வசவுகளைச் சொல்லிக்கொஞ்சுவார்கள்.

வேறு சில டாடிமார்கள் கொஞ்சுகிறார்களா, டார்ச்சர் பண்ணுகிறார்களா என்பது புதிர்! இராணுவ அதிகாரிகளின் கைகளில் சிக்கிய உளவாளியின் நிலைமைதான். கிள்ளி, அடித்து, கசக்கி, தூக்கி, பந்தாடி, 'கொன்னுடுவேன் படவா', 'முழியை நோண்டிடுவேன்' எனக் கொஞ்சி கர்ஜனை செய்வார்கள். குழந்தை பாவம் பயத்தில் சிரபுஞ்சி லெவலில் உச்சா மழை பெய்யும். மிலிட்டரி டாடிக்கு மாத்திரம் புரியவே புரியாது.

குழந்தைகள் சில நாட்கள் இனம் தெரியாமல் படுத்தும்; அழும்... படுத்தல் அதிகமாக ஆக ஆக 'சூரியனே, சந்திரனே...' என்ற கொஞ்சலிலிருந்து, 'கார்கோடகா, மகிஷாசுரா, கடோத்கஜா, இடும்பா, சும்ப, நிசும்பா (ரெட்டை வால்)' என எங்கோ பாதாள லோகத்தில் நிம்மதியாகக் குறட்டை விட்டுக் கொண்டிருக்கும் அசுரர்களை ஸ்மரித்து



எழுப்பி விடுவார்கள்.

வேளை கெட்ட வேளையில் அழுது ரகளை பண்ணும் குட்டிச் செல்லங்களின் நெற்றியில் விபூதியை அப்பி, குட்டி குன்னக்குடி ரேஞ்சில் தயாராக்கி, ''அழாதேடி டோலாக்கு நீ தாண்டி என் புல்லாக்கு...'' என ஐஸ் வைத்து பரவை முனியம்மா, தேனி குஞ்சரம்மாக்களை ஓவர்டேக் செய்யும் பாட்டிகள் ஏராளம்! எதுக்காக அழுதோம் என்றே புரியாமல் குழந்தைகள் கய்யா முய்யான்னு உளறிவிட்டுத் தூங்கி விடும் ஹாய்யா...

சினிமா பைத்திய அப்பாக்கள் கொஞ்சல் சான்ஸை மிஸ் பண்ணவே மாட்டார்கள். ''நமீச் செல்லம் (இது டாப் ஆர்டர்) த்ரிஷா தங்கம், ஸ்ரேயா ஸ்வீட்டு, நைநை நயன்...'' என்று பலவாறாகக் கொஞ்சி, மனைவிகளின் பூரிக் கட்டைகளையும் அலட்சியப்படுத்தி அன்பு மழை பொழிவார்கள்.

மனைவிகளும் சளைத்தவர்களல்ல. ''அஜி விஜி ரஜினி, சூரி தனு சிம்பு...'' என்று ஜகிரி நந்தினி மெட்டில் பாடி கணவர், மாமியாரைக் கலாய்ப்பதுண்டு.

பல வருடங்களுக்கு முன்னால் நான் கேட்ட, கண்ணால் பார்த்த ஒரு வித்தியாசமான கொஞ்சலுக்கு இன்றுவரை விடை தேடுகிறேன். ''மகாபாவி துரோணாசார்யா த்ராபை...'' என்று ஒரு அம்மா கொஞ்சுவதுண்டு. துரோணர் பெயரில் அந்த அம்மாவுக்கு என்ன கோபமோ? கௌரவர்கள் செட்டில் சேர்ந்ததால் ஆத்திரமா...? (சுதா சேஷய்யன் ப்ளீஸ் ஹெல்ப்!) அறியேன்.

தாத்தா, பாட்டி, அத்தை, மாமா, சித்தப்பா, பெரியப்பா... என எல்லோருடைய கொஞ்சல்களையும் கேட்டு, வளர்ந்து, படித்து, வெளிநாட்டில் க்ரீன் கார்டு வாங்கி செட்டிலாகும் 'குழந்தைகளை' என்ன சொல்லிக் கொஞ்ச? ○

திண்டுக்கல் நகர வீதிகளிலும் சரி, குடியிருப்புப் பகுதிகளிலும் சரி மிதி வண்டி, இருசக்கர மோட்டார் மற்றும் கார்களில் செல்வோர்க்கு இடுப்பு சுளுக்கும், உடம்பு வலியும் உடனடி





# பாடாய்ப் படுத்து

உத்தரவாதம். தோண்டப்பட்டிருக்கும் பாதாளச் சாக்கடை வேலைகளும், தோண்டி வேலை ஆகி மூடப்படாத பாதாளச் சாக்கடைப் பணிகளும், மூடப்பட்டு மேடு பள்ளம் நிரப்பப்படாத வீதிகளும் சாலைகளும் அவர்களை தினந்தோறும் இம்சித்துக் கொண்டிருக்கின்றன.

திண்டுக்கல்வாசிகளுக்கு தலைவலியை வரவழைக்கும் கேள்வி 'நகர பாதாளச் சாக்கடைத் திட்டம், எந்த ஆண்டு முடிவடையும்?' என்பதுதான்.




"பாதாளச் சாக்கடைத் திட்டப் பணிகள் தொடங்கி இரண்டரை வருஷம் ஆவுது. திட்ட ஒப்பந்தம் என்ன சொல்லுது தெரியுமா? வேலைகள் துவங்கிய பதினெட்டு மாசங்கள்ல முடிக்கணும்னு. அந்த பீரியட் முடிஞ்சு மேற்கொண்டு ஒரு வருஷம் ஆகியும், இன்னும் வேலை முடியல.

பாதாளச் சாக்கடைப் பணிகளை இரண்டு நிறுவனங்கள் ஒத்துக்கிட்டன. ஒவ்வொரு நிறுவனத்துக்கும், இருபத்துநாலு வார்டுகள். வேலைகளை ஆரம்பிச்சப்ப ரெண்டு நிறுவனங்களுமே, வேகவேகமாகத்தான் இயங்கின. இடையில் என்னாச்சுன்னு தெரியல. நாலு மாசமா வேலை எல்லாம் நின்னு போச்சு. விசாரிச்சா, கமிஷன் கட்டிங் தகராறு! அப்புறம், திடீர்னு ஒரு நாள் வேலையைத் தொடங்கினாங்க. திரும்பவும்

இருக்கேன். சேர்மன் வாங்கிய கமிஷனை அம்பலப்படுத்தினேன். துண்டுப் பிரசுரம் போட்டு விநியோகிச்சேன். எந்தப் பயனும் இல்லே!

ஃபேவர் ரோடு (Favour Road)ன்னு ஒண்ணு போடுறாங்க. அதுல தரமே கிடையாது. போட்ட ரெண்டு மாசத்துல பெயர்ந்து வருது.

# பாதாளச் சாக்கடை



விசாரிச்சா, கேட்ட கமிஷன் கிடைச்சிடுச்சாம். வேற ஒண்ணும் இல்லே. காண்ட்ராக்ட் எடுத்த நிறுவனம், ஒப்பந்தத் தொகையில் பதினாலு சதவிகிதம் கமிஷனை சம்பந்தப்பட்ட துறைக்கு, அடிமட்டத்திலிருந்து மேல் மட்டம் வரைக்கும் தந்துடுது. பார்த்தார் நகராட்சி சேர்மன் (தி.மு.க.) 'என் பங்கை வெட்டுனாதான், இனிமே வேலை'ன்னு கறாரா சொல்லிட்டார். சேர்மனுக்கு பங்கு போய்ச் சேர்ந்ததுக்கு அப்புறம்தான், வேலைகள் ஏதோ நடக்க ஆரம்பிச்சிருக்கு'' என்கிறார் திண்டுக்கல் நகராட்சி உறுப்பினர் ராம் தேவர் (அ.தி.மு.க.).

''இதனையெல்லாம் நகராட்சி கூட்டத்துல நானே கேட்டும்



❋ ராம் தேவர்

இந்த லட்சணத்துல பாதாளச் சாக்கடை வேலைங்க, முழுமையாகவும் நல்லபடியாகவும் நடக்குமான்னு தெரியலை. நகர வீதிகள்ல பள்ளம் குழிகள் ஏதும் நிரப்பப்படலை. குவிச்ச மண்ணையும் நிரவி விடலை. வீதி பூரா கல்லும் கரட்டானுமா கெடக்குது. 'திண்டுக்கல்லு... திண்டுக்கல்லு... வீதியெங்கும் சரளைக் கல்லு!'னு நகராட்சி சேர்மன் பாட்டுப் பாட வேண்டியதுதான் பாக்கி!'' என்கிறார் வேதனை கலந்த சிரிப்புடன் ராம்தேவர்.

# ரசகுல்லா பிரசன்னா!



'அழகாய்ப் பூக்குதே' பாடல் மூலம் இளநெஞ்சங்களில் இடம்பிடித்தவர் பாடகர் பிரசன்னா.

''என் தாத்தா தேர்ந்த வயலின் கலைஞர். அப்படியே அம்மாவுக்கும் சங்கீதம் பரிச்சயமானது. அம்மாவின் மூலமே எனக்குப் பாடல் வந்தது. முதல் குரு என் அம்மாதான். பதின்மூன்று வருஷம் வயலின் கத்துக்கிட்டேன். ஸ்கூலில் படிக்கும்போது தெரியாத்தனமா பாடின முதல் பாட்டுக்கே முதல் பரிசு கொடுத்தாங்க. கோயம்புத்தூர் எஸ்.என்.ஆர். காலேஜில் கம்ப்யூட்டர் சயன்ஸ் சேர்ந்தேன். அப்போ கல்லூரிகளுக்கிடையேயான பாட்டுப் போட்டிகளில் கலந்து கொள்வேன். கோயம்புத்தூர் ஏரியாக்களில் சாமி கேசட் போட வேண்டும் என்றால் நம்மிடம்தான் ஆஜராவார்கள். ராகவேந்திரரைப் பற்றிய பாடல் எனக்கொரு நல்ல வழிகாட்டலாக இருந்தது'' என்கிறார் புன்னகையுடன்.

''சினிமாவில் முதல் பாடல் பாட வாய்ப்பு கொடுத்தவர் பிரதீப்ரவி. 'சகியே' படத்தில் வரும் 'சகியே சகியே' பாடல். அப்புறம் டி.ராஜேந்தரின் 'காதல் அழிவதில்லை' படத்தில் வரும் 'என் மனசில் நீயேதானா' பாடலைப் பாடினேன். அப்புறம் ஜெஸ்ஸிகிஃப்ட் இசையில் 'அன்னக்கிளி நீ வாடி' பாடலை அவருடன் சேர்ந்து பாடினேன். 'வெயில்' படத்தில் 'வெயிலோடு விளையாடி', 'நான் அவன் இல்லை' படத்தில் 'ராதா ராதா காதல் வராதா' ஆகியவை ஹிட்டான பாடல்கள். 'பொக்கிஷம்' படத்தில் நான்கு பாடல்கள் பாடியுள்ளேன். இளையராஜா இசையில் 'தனம்' படத்தில் வரும் 'கண்ணனுக்கு என்ன வேண்டும்' பாட்டுதான் செம கிளாசிக். இளையராஜா பாடலைக் கேட்டுவிட்டு 'நல்லாயிருக்கு'னு சொன்னார்... அது போதுங்க. மலேசியாவில் நடந்த ராகவேந்திரர் பக்திப் பாடல் நிகழ்ச்சியில் 36 மணி நேரம் சாப்பிடாமல் பாடியதை மறக்க முடியாது'' என்கிறார் ரசகுல்லா குரல் பிரசன்னா!

- ராஜ்குமார்

# உங்களைத்தான் தேடுகிறோம்...

***வகுப்பில் பேராசிரியர் ஒருவர், ''நாம் பார்க்கும் பொருட்களின் ஏதேனும் ஒரு பாடம் கற்கலாம்'' என்றார்.***

***மாணவன் கேட்டான் - ''ரயில் வண்டி என்னச் சொல்கிறது?''***

***பேராசிரியர் சொன்னார்: ''காலதாமதம் செய்தால் நினைத்ததை அடைய முடியாது.''***

***''தந்தி...?''***

***''ஒவ்வொர் சொல்லுக்கும் மதிப்புண்டு.''***

ஒரு மெஸேஜ் சொல்றதுக்குள்ள இவ்வளவு பிழையான்னு டென்ஷனாயிட்டீங்களா...?

நாங்க உங்களைத்தான் தேடிக்கிட்டிருக்கோம். நீங்கள் பத்திரிகைப் பணியில் ஆர்வம் உள்ளவரா? பிழை திருத்தும் பணியில் முன் அனுபவம் உண்டா? ஆமாம்னா உங்க பயோடேட்டாவோடு அப்ளை பண்ணுங்க... உங்க அப்ளிகேஷன் வந்து சேர கடைசி நாள்: 12.2.2010.

***அனுப்ப வேண்டிய முகவரி:***

ஆசிரியர், கல்கி,
47-NP ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காட்டுதாங்கல், சென்னை - 32

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 09 -11 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 09 - 11* Registered as a Newspaper in Srilanka.